# ஸப்தகிரி

மார்ச், 1985

விலை ரூ. 1/-




திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



நரஹம் வந்நே தவசரணயோர் தவந்த மத்வந்தஹேதோ ః
கும்பீபாகம குருமபி ஹரே நாரகம் நாபநேதும |
ரமயா ராமா மருதுதனுலதா நந்தனே நாபிரந்தும
பாவே பாவே ஹருதயபவனே பாவயேயம் பவந்தம் ||



அடியேன் தேவரீருடைய திருப்பாத கமலங்களை வணங்குவது ஸுக துக்கத்திலிருந்து விடுபடுவதறகாக அல்ல. கும்பீபாகம என்ற பெயருடைய பயங்கரமான நரகததையடையாமல் தபபித்துக்கொள்வதற்காக அல்ல. அழகிய பூங்கொடி போன்ற தேகத்தையுடைய மெல்லிடையார்களைக் கூடி நந்தவனத்திலே அனுபவிப்பதற்காக அல்ல. பிறகு எதற்காக உம்மை நமஸ்கரிக்கின்றேன் எனறு கேட்டால், பக்தர்களின் துககத்தைப் போக்குபவனே! நான் எடுக்கும் ஒவ்வொரு ஜன்மத்திலும தேவரீரை என் மனக்கோயிலிலேயே சதா தியானம் செய்யும்படி எனக்கு தேவரீர் அருள் புரிவதற்காகவேதான்

முகுந்தமாலை – குலசேகராழ்வார்.

மார்ச், 1985

# ஸப்தகிரி

இதழ் 10 | மலர் 15

தனிப்பிரதி ரூ. 1 | வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முகபபில : 'பரமபதம' சித்திரம. திரு. ஏ. ராமசந்திரய்யா.

2-வது : திருமலை வசந்தோறசவத்தில் வெள்ளித்தேர்.

3-வது : தி. தி. தேவஸதானததின் ஆதரவில் அணமையில திருபபதியில நடைபெறற பல்வேறு சமய கலை நிகழ்ச்சிகளில் சில.

பினனட்டையில : 'தெலுங்கு யுகாதி' சித்திரம. பேட்டஸ்ரீ.

சிறபபாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயண I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸதானம், திருப்பதி

அசசிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி தேவஸ்தான அச்சகம,
திருப்பதி

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்....

நம் நாட்டில் வருடந்தோறும சமயத்தலைவர்கள் மற்றும் குறிபபிடட ஒரு சில தலைவர்கள், அறிஞர்கள் ஆகியோரின் பிறந்த நாட்களையும், நினைவு நாடகளையும் கொண்டாடி வருகிறோம. ஒரு சிலர் அந்த நாட்களைப பற்றிய தகவல்களை முன்னமேயே தெரிந்து கொள்வர். ஒரு சிலர் அவற்றை அந்த நாடகள் கடந்து சென்ற பின்பு தான் தெரிந்து கொள்வர். ஆனால் நம்மில் பலருக்கு அவை வந்து போனதே தெரியாது. அந்த நாடகளில் நமக்கு விடுமுறை அளித்தால்தான், அதற்கான காரணத்தை நாம வலுக்கட்டாயமாகத் தெரிந்து கொளகிறோம. அந்த நாட்களையும உண்டு உறங்குவதிலும, கேளிக்கைகளிலும செலவழித்துக் கொண்டு, உதயமாகும் அடுத்த நாளினை நொந்துக் கொண்டு மறுபடியும உறங்கச் செல்லுகின்றோம். இதுதான் இன்றைய ஒரு சாதராண இந்தியனின் மனபபோக்கு. இபபடிக் கூறுவது நம்மை நாமே குறைத்துக் கொளளும தாழவு மனபபான்மையினைத் தான் காட்டுகிறது என்று கூறினால், அது நமமை நாமே ஏமாற்றிக் கொள்ளும ஒரு காரணமாகத்தான அமையும. ஒரு சிலரின் உழைப்பால்தான், பெருமையினைதான் நமது இந்தியா உலக அரங்கில தனக்கென ஓர் இடத்தினை பெறறு வருகின்றது என்பது நமது சரித்திரத்தைச் சற்றே கவனித்தால் நமக்கு நன்கு தெரியும. எதிர்த்து பேச வேண்டும் என்ற எண்ணத்தை மட்டுமே நமமிடையே உருவாக்கிக் கொண்டிருக்கின்றோமே தவிர, எதிர்த்து ஒரு ஆக்கப்பூர்வமான செயலை செய்திடல வேண்டும் என்ற ஒரு சிந்தனையை வளர்த்துக் கொள்ளவில்லை என்பது ஒரு கசபபான உண்மையாகும.

இந்தச் சிந்தனையை நம்மிடையே தட்டி எழுப்பத்தான் நமது முன்னோர்கள் இறைவனின திருஅவதார தினங்களையும, சமயத் தலைவர்களின பிறந்த நாட்களையும, நினைவு நாட்களையும் கொண்டாட வழிவகுத்தனர். இது போன்ற விழாக்களை கொண்டாடுவது நமது பிரச்சனைகளை மறக்கத்தான் என்பதைவிட, அவற்றை தீர்த்துக் கொள்ளத்தான என்று கூறுவதே பொருத்தமாகும். சமுதாயத்திறகாக அவர்கள ஆற்றிய தொண்டினை நினைத்துக் கொண்டு, எதிர்கால வாழ்க்கைக்காக அவர்கள விட்டுச் சென்ற அறிவுரைகளை பின்பறறுவதே நாம கொண்டாடும விழாக்களுக்குப பெருமையாகும். இதனை நாம மறந்தால், ஆறடுக்கு மாளிகையில் வசிபபதும், குகைகளிலும மரபபொந்துக்களில வாழவதும ஒன்றுதான.

இந்தியாவைப பொறுத்தவரை, நாட்டுபபறறு என்பது சமயபபறறின்மீதே ஆதாரபபடடு வந்தது. வருகின்றதும்கூட சமய வாழ்க்கையே நமது அனறுட சமுதாய வாழ்க்கையாகும தேசிய அளவிலே கொண்டாடும் நமது புகழ்பெற்ற தலைவர்கள் யாவரும சமயபபறறு மிககவாகளேயாவர் அதனால்தான அவர்களுடைய சிந்தனையும செயலும் தெளிவாக இருந்தன. அதனை மனதிற் கொண்டுதான, சமயத்தற்காகத் தன் உழைபபையும, உணர்வினையும ஈந்த சமயத் தலைவர்களின பிறந்த மற்றும நினைவு நாட்களின்போது அவர்களை நினைவு கூர்ந்து வணங்குகின்றோம். இவவகையில இமமாதத்தில கொண்டாட விருக்கும குலசேகராழ்வார், ஸ்ரீ அனனமாச்சார்யார், ஸ்ரீ வியாசராயர், மற்றும ஸ்ரீ வாதிராஜர் போன்ற பல திறபபடட சமயத்தலைவர்களின் அருமையும பெருமையும் ஒரு சில நேரமாவது நினைத்துப பார்பபதே, நாம அவர்களுக்குச் செலுத்திடும நினைவஞ்சலிகளாகும்.

பல திறப்பட்ட சமயத் தத்துவக் கொள்கைகளை அவர்கள் தங்களிடையே கொண்டிருந்தாலும, திருவேங்கடவன்மீது அவர்கள் கொண்டிருந்த பக்தியும, அவர்கள் புனைந்த பாக்களும் நமக்கு சமய ஒருமைபபாடடின பெருமையினை எடுத்துச் சொல்லுகினறன

அரச பரம்பரையில உதித்தாலும், பாற்கடல் நாயகனின் அருமையினை உணர்ந்ததும - அவனடியார்களின் பெருமையினை அறிந்ததும் முடிதுறநது, சமயத்தொண்டில முழு மூச்சுடன் கலந்து வேஙகடவன மீதும சாரங்கனின் மீதும தமிழிலும், வடமொழியிலும பாக்கள பலபுனைந்து தமிழ் இலக்கியத்திறதும சமயத்திறகும தன் அருட்தொண்டினைத் தந்த ஆழ்வார்களில ஒருவரான குலசேகரரையும, கி. பி. 15-ம நூறறாண்டில் வாழ்ந்து திருவேங்கடவனமீது காதற் சுவையும, பக்திச் சுவையும கொணட சுமார் பதினைந்தாயிரம பாக்கள் புனைந்து தெலுங்கு சமயஇலக்கியத்தில ஒரு மறுமலர்ச்சியினை உண்டாக்கிய ஸ்ரீதாள்ளபாக்க அனனமாச்சார்யாவையும, கி. பி. 16-ம நூறறாண்டின முதற பகுதியில வாழநது ஸ்ரீ விஜயா பிரஸனன சுவாமிகளின ''ஏக முனிகளித்து ஏனுபல வியாசமுனி மாடித'' எனும கூறறுபபடி தலை சிறந்த ஞானியாக இருந்து, விஜயநகர அரசர்களின் குலகுருவாக விளங்கி, கனனட மொழியிலும, வடமொழியிலும இறைவனமீது பல பாக்கள இயறறி, திருமலையில திருவேங்கடவனைத் தொடடு பூசிக்கும உரிமையும் பெற்று அங்கே வியாசா மடம ஒனறு 'நிறுவிடும வகையில திருத்தொண்டாறறிய ஸ்ரீ வியாசராயரையும, அஷ்டமடங்களில ஒனறான ஸோதே மடத்தின தலைவராக விளங்கி கனனட மொழியில் பல அரிய பக்திப பனுவல்களை இயறறி, த்வைத ஆசார்யர்களில தனக்கென ஒரு இடத்தைப பிடித்துக் கொணட ஸ்ரீ வாதிராஜரையும வழிபடடு, அவர்களுடைய சமய இலக்கிய பெருமையினை உணர்ந்து, அவர்கள் வழிபட்ட அமமாலவனின பெருமை பல பேசி, நாமும நம்முடைய வாழ்க்கையை ஓர் உன்னதமான இலக்கினை நோக்கி நடத்துவோமாக !

# செய்திச் சுருக்கம்



## தெப்போற்சவம்:

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர தெப்போற்சவம் 2-3-85 முதல் 6-3-85 வரை கொண்டாடப்பட உள்ளது. முதல் இரண்டு நாட்களின் போது முறையே ஸ்ரீ கோதண்டராம சுவாமியும், ஸ்ரீ கிருஷ்ணரும் இறுதி மூன்று நாட்களின்போது ஸ்ரீ வேங்கடேஸ்வரரும் தத்தம் தேவிமார்களுடன், கோயிலை அடுத்துள்ள புஷ்கரிணியில், நன்கு அலங்கரிக்கப்பட்ட தெப்பத்தில் எழுந்தருளி, பக்தர்களுக்கு அருட்புரிவர். ரூ. 2,500 செலுத்தி பக்தர்கள் இவ்விழாவில் நேரடியாக பங்கேற்கலாம்.

## மஹாசிவராத்திரி:

திருப்பதியிலுள்ள ஒரே சிவன் கோயிலான தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயிலில் 17-2-85 அனறு மஹா சிவராத்திரி விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மேலும் 18-2-85 முதல் 20-2-85 வரை கோயிலில் ஏகாந்தோற்சவம் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இநநாட்களின் மாலை நேரங்களில் நடைபெற்ற ஊஞ்சல் சேவையினை ஏராளமான பக்தர்கள் கண்டு களித்தனர்.

## யுகாதி ஆஸ்தானம்:

திருமலைக் கோயிலில் 22-3-85 அன்று வருடாந்திர யுகாதி ஆஸ்தானம் நடைபெற இருப்பதால், 19-3-85 அனறு கோயிலில் கோயி லாழ்வார் திருமஞ்சனம் நடைபெறும் இதனால் ரூ. 2000/- செலுத்தி நடைபெறும் ஆர்ஜித கல்யாணோற்சவம் நடைபெறாது. ஆனால் ரூ. 500/- செலுத்தி நடத்தப்படும் பிரத்யேக கல்யாணோற்சவம் மட்டும் நடைபெறும். அன்று ஸர்வ தரிசனம் மதியம் 1 மணிக்குத் தொடங்கும். 22-3.85 அன்று கல்யாணோற்சவம், வசந்தோற்சவம், வாகன சேவைகள், பிரம்யோற்சவம் ஊஞ்சல் சேவை ஆகியன நடைபெறா.

## பிரம்மோற்சவம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகோதண்டராமசுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோற்சவம் இம் மாதம் 20-3-85 முதல் 28-3-85 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட உள்ளது. 24-3-85 அன்று நடைபெறும் கருட சேவையும், 27-3-85 அன்று நடைபெறும் திருத்தேரும் இப்பிரம்மோற்சவத்தின முக்கிய நிகழ்ச்சிகளாக அமையும்.

## சூர்ய பூஜை:



சென்னை திருப்பதி வழியில் நாகலாபுரத்தில் உள்ள தி.தி.தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயிலின் வருடாந்திர தெப்போற்சவம் 25-3-85 முதல் 27-3-85 வரை மூன்று நாட்கள் கொண்டாடப்பட உள்ளது. முதல் நாளன்று சூர்ய பகவான் மூலவரான ஸ்ரீ வேத நாராயண சுவாமியின் திருவடிகளையும், இரண்டாம் நாள் திருஉந்தியினையும், மூன்றும் நாளன்று திருமுகத்தினையும் வழிபடும் வகையில், சூர்ய ஒளி கோயிலினுள் வீசப்படுகின்றது. இமமூன்று நாட்களின்போது, உற்சவமூர்த்தி தன் தேவியருடன் கோயி

48-ம் பக்கம் பார்க்க



வரைந்த ஓவியங்கள் எதையும் ஸீதை ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

இவ்விதம் இருக்கையில் ஒருநாள் கனவில் ஸீதாதேவி இராமபிரானைக் கண்டாள. இராமனைக கனவில் கண்டது முதல் தேவிக்கு இராமனின் நினைவு அதிகமாகியது. இதனை அறிந்த தோழிகள் இச்செய்தியை ஜனக மஹாராஜாவிடம் தெரிவித்தனர். ஜனகரும் தன்மகளை ஸ்ரீராமனுககு திருமணம் செய்துவைப்பது பற்றி மகிழ்ச்சியே அடைந்தார். ஆனால் தன்னிடம் உள்ள சிவதனுசை யார் வளைத்து நாண் ஏற்றுகிறாரோ அவருக்கே ஸீதையை திருமணம் செய்து தருவதாகத் தான வைததிருந்த பந்தயத்தை எணணிக் கவலைகொணடார். தவிர ஸீதா விவாஹ விஷயத தில் இராவணனால் ஏதேனும் இடை

# ஜானகீ பரிணய இராமாயணம்

தஞ்சையை ஆண்ட மஹாராஷ்டிர மன்னர்களில் சஹோஜி மஹாராஜாவின் அவைப் புலவராக இருந்தவரும் தலைசிறந்த அறிவாளியும் ஆகிய ராமபத்ரதீக்ஷிதர் என்பவரால் இநத "ஜானகீபரிணயம்" என்ற இராம நாடகம் எழுதப்பட்டது. இந்த நாடகம் ஸீதாகலயாணம் முதல் தொடங்கி இராமபட்டாபிஷேகத துடன் நிறைவு பெறுகிறது. இவர் இதை ஏழு பிரிவுகளாகப் பிரிதது எழுதி உள்ளார். இவர் ஸ்ரீராமன்மீது எல்லையற்ற அன்புடையவர். இவர் இயற்றிய நூல்களில் ஜானகீபரிணயம்தவிர, இராமபாணஸ்தவம், இராம தூணீரஸ்தவம, இராமசாபஸ்தவம், ஆகியவையும் மிகச் சிறப்பானவை.

ஜானகீ பரிணயம் என்ற இந்த காவியத்தின்படி தேவர்களது பிரார்த்தனைக்கு இணங்கிய பகவான ஸ்ரீராமனாக அயோத்தியில் தசரத சக்கரவர்த்திக்கும், ஸ்ரீதேவி ஜனகராஜன் மகளாகவும் அவதரித்து வளர்ந்து வந்தார்கள. காலக்கிரமத்தில் ஸ்ரீ ராமனும் ஸீதாதேவியும திருமண பிராயத்தை அடைந்தார்கள். அப்போது மிதிலையில் ஸீதையின் தோழியான லீலாவதி என்பவள் பல அழகிய ராஜகுமாரர்களின் உருவததை ஓவியமாக வரைந்தாள். ஸீதையின் மனக் கருத்தை அறிய எண்ணி லீலாவதி அவற்றை ஸீதையிடம் காணபித தாள். ஆனால் சிறுவயது முதல் ஜனகரது குலகுருவான ஸதானந்தர் ஸீதையிடம் ஸ்ரீராமனது பெருமைகளையும் உத்தம குணங்களையும் பற்றி நிரம்பக் கூறியிருந்தார். இதனால் ஸீதாதேவியின் மனம் இராமபிரானிடமே வைத்து இருந்ததால் லீலாவதி

யூறு வருமோ என்றும குழப்பம அடைந்தார். ஏனெனில் லங்கேசுவரனான இராவணனுககு ஸீதையைக் தான் மணக்க வேண்டும் என்ற ஆவல இருந்து வந்தது. எனவே ஜனகா, ஸீதையை எவ்விதம் இராமனுககே திருமணம செய்து வைப்பது எனபது பற்றி ஸதானந்தருடன ஆலோசித

திரு. பி ரவீந்திரன், பி ஏ.,
திப்பிராஜபுரம்.

துக் கொண்டு இருந்தார். அப்போது, கௌசிகீ நதிக்கரையில விசுவாமித்ர முனிவர் யாகம ஒன்று நடதத நிச்சயித்து இருப்பதாகவும், அதற்கு அவசியம் வரும்படி ஜனகருக்கு அழைப்பு அனுப்பியிருந்தார். உடனே ஜனகரது மனத்தில் ஸீதா விவாஹ விஷயமாக ஒரு திட்டம் உதயமாயிற்று.

அதன்படி ஜனகரும ஸதானந்தரும், தன் உறவினர்களுடனும், முக்ய

மான பரிவாரங்களுடனும் ரகசிய மாக சிவதனுசை எடுத்துக்கொண்டு, யாகத்தைக்காணச்செல்வது போன்ற வெளிப்புற ஏற்பாடுகளைச் செய்து விட்டு கிளம்புவது எனறும், அங்கு சென்று எப்படியும் இந்த விவாஹத் தை நடத்தித்தர வேண்டும் என்று விசுவாமித்ர முனிவரைச் சரணடை வது என்றும் முடிவு செய்தனர்: விசுவாமித்ரருக்கு கருணை அதிகம் ஆதலால் எப்படியும் இராமனை யாக சாலைக்கு அழைத்து வந்து, ஸீதா கல்யாணத்தை நடத்திவைத்து விடு வார் என்றும் நம்பிக்கை கொண்ட னர். விவாகத்தையும் யாகசாலை யிலேயே ரகசியமாக பூர்த்தி செய்து விடலாம் என்று எண்ணி, ஸகல திர வியங்களுடனும் ஜனகர் கிளம்பினர். சிவதனுசும் மறைத்து எடுத்துச் செல்லப்பட்டது. விரைவில் விசுவா மித்ரரது யாகசாலையை அடைந்த ஜனகர் முனிவரது பாதங்களில நமஸ் கரித்துத் தன் கவலையைக் கூறிக் கண் ணீர் சிந்தினர்.

மனம் இரங்கிய விசுவாமித்ரர் ஸீதையை இராமனுக்கே திருமணம் செய்து வைப்பதாக வாககளித்தார். விரைவில் தன் தவவலிமையால் அயோத்தியை அடைந்தார். தசரத ரிடம் ஸீதையின் திருமண விஷயத் தைப் பேசி முடித்தார். தனது யாகத்தை அரக்கர்களிடம் இருநது தீங்கு நேராமல் காப்பாற்ற வருவது போல் நாட்டு மக்களுக்கு அறிவித்து விட்டு இராமலக்ஷ்மணர்களுடன் தசர தரை யாகசாலைக்கு வரும்படி கூறி னர். அதன்படியே விசுவாமித்ர முனிவருடன் தசரதர், இராமலக்ஷ் மண, பரத, சத்ருகனர்களை அழைத துக் கொண்டு சதுரங்க சேனைகளுடன் கிளம்பினர்.

ஆனல் இதனிடையில் மேற்கண்ட எல்லா விஷயங்களையும், மாயாவி களான தனது ஒற்றர்கள் மூலம் இராவணன் அறிந்து கொண்டான். இதனல் இராமலக்ஷ்மணர்களையும், முனிவரையும் வரும் வழியிலேயே தடுத்து நிறுத்திக் கொன்று விடும் படி தாடகையையும், ஸுபாஹு, மாரீசன் முதலியவர்களையும் லங்கேசு வரனை இராவணன் ஏவினன. அதன் பிறகு சாரணன் என்ற அரக் கனை லக்ஷ்மணனுகவும், மாயாவியான வித்யுஜ்ஜிஹ்வனை விசுவாமித்ர முனி வராகவும் உருவம் தரித்துக் கொள் ளச் செய்தான். இராவணன் தன்னை இராமனுக மாற்றிக் கொண்டான. இவ்விதம் மாயாரூபம் தரித்த மூவ ரும், திரஸ்கரணீ மந்த்ர வித்யை யால் தங்களைப் பிறர்கண்களில் தெரி யாமல் இருக்கும்படியும், தங்களுக் குள் பேசுவதைப் பிறர் கேட்க இய லாதபடியும் செய்து கொணடனர் விரைவில் ஸீதை இருக்கும் இட மான விசுவாமித்ரரது யாகசாலையை அடைந்தனர்.

அப்போது அங்கு ஸீதை இராம னது ஓவியத்தை வண்ணச் சீலையில் வரைந்து கொண்டு இருந்தாள். ஆனல் அரக்கர் மூவருக்கும் ஓவியம் மட்டும் தான் தெரிந்ததே தவிர அதை வரையும் ஸீதை கண்ணுக்குப் புலப்படவில்லை. ஓவியம் வரைந்து முடிககும வரை மூவரும் அமைதி யாக நின்றனர். ஓவியத்தைப் பார்த்த சாரணன், இந்த உத்தம புருஷன் யாரோ? என்றன். வித் யுஜ்ஜிஹ்வன் இவனது பாதங்களே இவனை ஸகல ஜீவராசிகளாலும் போற்றத் தக்கவன் என்று காட்டு கிறது எனறும் எனக்கு உடனே இவ னைக்கண்டு நமஸ்கரிக்கும் ஆசை உள் ளத்தில் ஏற்படுகிறது என்றும் கூறினன். உடனே இராவணன் இவ னது எதிரிகளும், இவனை ஒருமுறை நேரில் பார்த்தால் தன்பகை மறந்து இவனுக்கு வசமாகி விடுவார்கள் என்று கூறினன். இராவணன் இந்த ஓவியத்தை வரைந்தது யாராக இருக் கும் என்றும், தான் உடனே அவர் களைப் பாராட்ட வேணடும் என்றும் வித்யுஜ்ஜிஹ்வனைக் கேட்டான்.

வித்யுஜ்ஜிஹ்வன் இதனை வரைந் தது ஸீதையாகவே இருக்கும் என் றும், இந்தப் படத்தில் இருப்பது இராமனே என்றும் தற்போது விசு வாமித்ர முனிவரால் ஸீதைக்கு மந்த்ரபலம் மிக்க "ராக்ஷஸாந்தகர ணம்" என்ற கங்கணம் அணிவிக்கப் பட்டு இருக்கக் கூடும் என்றும், அதனல்தான் நம் கண்களுக்கு ஸீதை தெரியவில்லை எனவும் இராவண னிடம் தெரிவித்தான்.

இச் செய்தியைக் கேட்ட இராவ ணன் உடனே ஸீதையைக் காணத் துடித்தான். உடனே வித்யுஜ்ஜி ஹ்வன் தன்னை திரஸ்கரணீ வித்யையி லிருந்து விடுவித்துக் கொண்டு, களைத்த முகத்துடன் வெகுதூரம் பயணமாகி வந்த ஒரு முனிவரைப் போல உருமாற்றிக் கொண்டு யாக சாலைக்குள் நுழைந்தான். யாவரும் அவனை வரவேற்று உபசரித்தனர். அவன் நேராக ஸீதை இருக்கு மிடத்தை அடைந்தான். ஸீதையும் யாரோ முனிவர் என்று எண்ணி நமஸ்கரித்தாள். வித்யஜ்ஜிஹ்வன் தேவியை ஆசிர்வதிதது விட்டுத் தன்னை விசுவாமித்ர மஹரிஷி அனுப் பியதாகவும், நாளை இராம லக்ஷ்மணர் களுடன் விசுவாமித்ர மஹரிஷி வரப்போவதை முன்கூட்டி தெரிவிக் கவே தான் வந்திருப்பதாகவும் தெரி வித்தான். ஆனல் ஸீதை இருக்கும் இடம் தெரியாமலே வித்யுஜ்ஜிஹ்வன் ஊகமாக மேற்கண்ட உரையாடலைப் பேசி முடித்தான். ஆனல் இச்சுபச் செய்தியைக் கேட்ட மகிழ்ச்சியால் ஸீதாதேவி தன்னை மறந்து விசுவா மித்ரரால் தனக்கு அளிக்கப்பட்ட கங்கணங்கள் இரண்டையும் கழற்றிப் பரிசிலாக, வந்திருநத முனிவரான வித்யுஜ்ஜிஹ்வனிடம் கொடுத்துவிட் டாள். உடனே அரக்கர்கள் மூவர் கண்கட்கும் தேவி தென்படத் தொடங்கினள். வித்யுஜ்ஜிஹ்வனும் விடைபெற்று கங்கணத்துடன் வெளியேறினன்.

மறுநாள் இராவணன், சாரண னுடனும், வித்யுஜஜிஹ்வனுடனும், இராமலக்ஷ்மணர்களாகவும், விசுவா

மித்ர முனிவராகவும் ரூபம் தரித்து யாகசாலைக்குள் நுழைந்து, ஜனகரும், ஸதானந்தரும் இருக்கும் இடத்தை அடைந்தனர். அவர்களும் எதிர்கொண்டு வரவேற்றனர். இராமலக்ஷ்மண வேஷத்தில் உள்ள இராவணனையும், சாரணனையும், விசுவாமித்ரரது வடிவத்தில் வந்துள்ள வித்யுஜ்ஜிஹ்வன் ஜனகராஜனுக்கு அறிமுகப்படுத்தினன். இராவணனும், சாரணனும், ஜனகரையும், ஸதானந்தரையும் நமஸ்கரிக்க, இதனால் அவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தனர். ஆனால் அப்போது, சித்ராங்கதன் என்ற ஒற்றன் மூலம் இராவணனது சதி ஆலாசனைகளை அறிந்த தேவேந்திரன், ஒரு அசரீரி ஒலியை உண்டாக்கி வந்திருப்பவர்கள் 'யார்யார்' என்பதை ஜனகர் முதலான யாவரும் கேட்கும்படி அறிவித்தான். ஆனால் சற்றும் கலங்காமல் மாயாவியான வித்யுஜ்ஜிஹ்வன் ஜனகரிடம், இது அரக்கர்களுடைய மாயையேயாகும் என்றும், இது இராவணனால் உண்டாக்கப்பட்ட ஒலியே என்றும் எச்சரித்து,அவர்களைக்குழப்பம்அடையச் செய்தான். எனவே ஜனகரும், ஸதானந்தரும் செய்வதறியாது திகைத்தனர்.முடிவில்இராவணாதியர்களையே உணமையான இராம லக்ஷ்மணர்கள் என்றும் நம்பத் தொடங்கினார்கள். விசுவாமித்ரராக வந்திருநத வித்யுஜ்ஜிஹ்வன், ஜனகரிடம் சீக்கிரம் ஸீதாகல்யாணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படியும், தசரதர் முதலானவர்கள் பின்னால் வருவதாகவும் கூறினான். இராவணனால் இடையூறு வருமோ என அஞ்சி விரைவில் தான் வருவதற்காகக் காத்திராமல் இராமனுக்கு ஸீதையை திருமணம் செய்து வைத்துவிடும்படி தசரதர் கூறியதாகவும் தெரிவித்தான். அதன்படி ஜனகர் விரைவில் திருமண ஏற்பாடுகளைச் செய்யக் கிளமபினார்.

ஆனால், அதற்குள் உண்மையான விசுவாமித்ரர், இராமலக்ஷ்மணர்களுடன் ஆசிரம வாயிலை அடைந்தார். உடனே ஒரு வாயிற்காவலன் ஜனகரிடம் ஓடிவந்து அவர்களது வருகையைத் தெரிவித்தான். இதனால் ஜனகர் குழப்பம் அடைந்தார். உள்ளே இருக்கும் வேஷதாரியான விசுவாமித்ரர் ஜனகரிடம் வெளியில் வந்திருக்கும் மூவரும் இராவணனும் அவனைச் சேர்ந்தவர்களுமே என்றும், அவர்களை அழைத்து வந்து பேசிக் கொண்டு இருக்கும்படியும் தாங்கள் அதை மறைவில் நின்று கவனிப்பதாகவும் தெரிவித்தான். தக்க சமயத்தில் கையும் களவுமாக அரக்கர்களைப் பிடித்து விடலாம் என்றும் கூறி அவ்விடம் விட்டகன்றனர். தங்களை திரஸ்கரணீ மந்த்ரத்தால் மறைத்துக் கொணடு அங்கு நடப்பதை கவனிக்கலானார்கள்.

அதே சமயம் உண்மையான விசுவாமித்ரர், இராமலக்ஷ்மணர்களுடன் ஆசிரம வாயிலை அடைந்தனர்; ஜனகரும் குழப்பத்துடன் வரவேற்று உபசரித்தார்; பின்னால் தசரதரும் அவரது பரிவாரங்களும் வந்து கொண்டு இருப்பதாக தெரிவித்த பின் முனிவர் வரும் வழியில் நடந்த வரலாற்றை ஜனகருக்கும், ஸதானந்தருக்கும் கூறலானார்: அரசனே! நாங்கள் யாவரும் வனத்தில் ஓர் இடத்தில் பாசறைகள் அமைத்து தங்கினோம். அப்போது இராமன் தனியாக இயற்கை எழில்களை ரசித்தபடி நெடுந்தூரம் வனத்திற்குள் சென்றான். அப்போது மாரீசன் என்ற அரக்கன் இராமனைக் கண்டதும் மாயையால் ஒரு ஸீதையை உண்டாக்கினான். அந்த மாயா ஸீதை இராமனது வருகையை எதிர்பார்த்து ஏமாந்து தீக்குளிப்பதாகவும் ஒரு காட்சியை ஏற்படுத்தினான். இதனைக் கண்டு கலங்கிய இராமன் தன்னை முன்னிட்டு ஸீதை ப்ராணத்யாகம் செய்ததால் மனம் ஒடிந்து உயரமான ஒரு இடத்தில் ஏறி கீழே குதித்து உயிரை விட நிச்சயித்தான். எனவே இராமன் ஒரு பாறைமீது காலை வைத்தான். உடனே அந்தப் பாறை சாபம் நீங்கி அகலிகையாக மாறியது. உடனே கௌதம முனிவரும் வந்து சேர்ந்தார். அகலிகையும் கௌதமரும், இராமனுக்கு ஆசி கூறி மாரீசனது மாயைச் செயல்களையும் விளக்கினார்கள். பிறகு தசரதரும், நாங்களும் தங்கியுள்ள இடத்தை இராமன் வந்தடைந்தான். பிறகு நாங்கள் வரும் வழியில் எதிர்த்த ஸுபாஹு, தாடகை முதலியவர்களை இராமன வதம்செய்தான். மாரீசனை வாயுவஸ்த்ரத்தால வெகுதூரம் தள்ளி விழும்படி செய்தான்'' என்று நடந்த விருத்தாந்தங்களை விபரமாக விசுவாமித்ரா ஜனகரிடம் எடுத்துரைத்தார்.

ஆனால் இவையாவற்றையும் கேட்டும் ஜனகரும், ஸதானந்தரும், இராமனால் இத்தகைய செயல்களைச் செய்ய இயலுமா என சந்தேகித்தனர். இராவணனது மாயையால் ஏற்பட்ட குழப்பமும் அவர்களுக்கு நீங்காததால் செய்வதறியாது திகைததனர். அவர்களது முகத்தில் உள்ள கலவரத்தைக் கண்ட விசுவமித்ரர், 'ஜனக ராஜனே! இங்கு நடந்தவற்றை நான் அறிந்து கொண்டேன். எனவே உன மனதில் உள்ள குழப்பம் நீங்க நீ எவ்விதத்திலை வேண்டுமானாலும் இராமனது வலிமையை சோதித்துக கொள்ளலாம். அவ்விதம் செய்து உன் ஐயம் நீங்கினால் பிறகு விவாஹததைப் பற்றி முடிவு செய்வோம்' என்று கூறிப் புன்னகைத்து நின்றார். இதனால த்ருப்தியடைந்த ஜனகர் இராமன் முன்பு சிவதனுசை கொணடு வரச் செய்து தனது பந்தயத்தையும் தெரிவித்தார். பிறகு இராமன் அனாயாசமாக வில்லை தூக்கி நிறுத்தி நாணேற்றினார். ஜனகர் பெருமகிழ்ச்சியடைந்தார். விரைவில் தசரதரும், அவரது பரிவாரங்களும் யாகசாலையை அடைந்தன.

யாவருமாக விசுவாமித்ரரது யாகசாலையிலேயே ஸீதாதேவியை இராம

பிரானுக்குத் திருமணம் செய்துவைத்தனர். ஜனகரின மகள் ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும், ஜனகரது தம்பி குசத்வஜன் பெண்களான மாண்டவியையும், சுருத கீர்த்தியையும் முறையே பரத சத்ருக்னர்கட்கும் திருமணம் செய்விக்கப்பட்டது. மேற்கண்ட நிகழ்ச்சிகள் யாவற்றையும் மறைந்து நின்றுபார்த்த இராவணன் முதலிய அரக்கர்கள் இலங்கை திரும்பும் முன்பு பரசுராமரைக் கண்டு சிவதனுசை இராமன் முறித்ததைக் கூறி அவருக்கு ஆத்திரம் ஏற்படச் செய்துவிட்டுச் சென்றனர். இதனால் எதிர்த்து வந்த பரசுராமரை இராமன் கர்வபங்கம் செய்தார். பிறகு தசரத குமாரர்கள் அயோத்தியில் இன்பமாகக் காலம் கழித்தனர். ஆனால் இராவணன் பொறாமையால் இராமன் மீது த்வேஷம் கொண்டு மாயாரூபம் எடுப்பதில் சிறந்த மாயவிகளான வித்யுஜ்ஜிஹ்வனையும் சாரணனையும் அயாத்திக்கு அனுப்பிக் குடும்ப கலகமூட்டி இராம லக்ஷ்மணர்களை ஸீதாதேவியுடன் வனவாஸம் அனுஷ்டிக்கும்படி செய்தான். தசரதரும் இறந்தார். பரதனிடம் தனது பாதுகைகளைக் கொடுத்தனுப்பி அரசாட்சி புரியும்படி அனுப்பிவிட்டு இராமன் விரைவில் தண்டகாரண்யத்தை அடைந்தார். அப்போது இராவணன் இராமனைக் கொன்றுவிடும்படி கரனுக்குச் செய்தி அனுப்பினான். கரன் விராதனை அந்த பணியை செய்து முடிக்கும்படி ஏவினான். இதே நேரத்தில் ஸீதையைத் தூக்கி வரும்படி சூர்ப்பணகையை இராவணன் அனுப்பி இருந்தான்.

விராதன் குயில் உருவம் எடுத்துச் சென்று இராமாசிரமத்தை அடைந்து வேவு பார்த்தான். அப்போது அங்கு ஸீதையைக் கண்ட விராதன் தான் தேவியைத் திருமணம் புரிந்து கொள்ள விருப்பம் கொண்டான். அதே போல் மறைவில் நின்று கவனித்த சூர்ப்பணகை இராமனை விரும்பினாள். இருவரும் ஒருவர் நிற்பதை மற்றவர் தெரிந்து கொண்டதால் தனியே சந்தித்துப் பேசிக் கொண்டார்கள். தங்கள் இருவர் விருப்பமும் கைகூடும் வகையில் ஒரு திட்டம் வகுத்தனர். விராதன் ராமவேஷம் எடுத்துக் கொண்டும், சூர்ப்பணகை ஸீதா ரூபம் தரித்துக் கொண்டும் தனித்தனியே இராமாசிரத்தை நோக்கி கிளம்பினார்கள். ஆனால் வனத்தில் எதிர்பாராமல் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்டனர். சூர்ப்பணகையும், விராதனும் தங்களை ஒருவருக்கொருவர் ஸீதை எனவும், இராமன் என்றும் எண்ணி ஏமாந்து காதல் கொணடு களிப்புற்றனர். திடீரென்று விராதன் சூர்ப்பணகையை ஸீதை என எண்ணித் தூக்கிக் கொண்டு விண்ணில் கிளம்பினான். உடனே சூர்ப்பணகை இராமனுக்குப் பறக்கும் சக்தி ஏது என எண்ணி சந்தேகம் கொண்டாள். விராதனும் ஒரு மானிடப் பெண்ணுக்கு இவ்வளவு எடை கனம் எப்படி வந்தது என ஐயம் கொண்டான். இருவருமே இதனால் சுய உருவத்தை எடுத்தனர். அப்போது அவ்வழியே வந்த லக்ஷ்மணன் இவர்களைக் கண்டான். விராதன் லக்ஷ்மணனைத் தாக்கினான். லக்ஷ்மணன் தனது பாணங்களால் விராதனைத் தாக்கினான். அப்

(41-ம் பக்கம் பார்க்க)

## தி. தி. தேவஸ்தான

## ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில், திருப்பதி.

### தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | சுப்ரபாதம் |
| 5-30 | முதல் | 9-30 | வரை | ஸர்வ தரிசனம் |
| 9-30 | ,, | 10-30 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 10-30 | ,, | 10-45 | ,, | முதல் மணி |
| 10-45 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | ,, | 11-45 | ,, | இரண்டாவது மணி |
| 11-45 | ,, | 4-00 | (மாலை) | ஸர்வ தரிசனம் |
| 4-00 | முதல் | 4-30 | வரை | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 4-30 | ,, | 5-30 | ,, | ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 5-30 | ,, | 5-15 | ,, | இரவு மணி |
| 5-45 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 6-15 | ,, | 6-45 | ,, | தீபாராதனை |
| 8-00 | முதல் | 8-15 | வரை | ஏகாந்த சேவை |

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | — | ரூ.. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

# ★ பசு உண்மை ★

உலகில் காணப்படும் உயிர்களை யும், அறிவற்ற சடப்பொருள்களையும் ஆக்கியும் காத்தும் அழித்தும் மறைத்தும் ஒடுக்கியும் செய்யவல்ல ஒப்பற்ற பொருள் ஒன்று இருத்தல் வேண்டும். அம்மெய்ப்பொருளையே பதி-இறை-தலைவன்-கடவுள் எனப் பல பெயர்களால் அழைக்கிறோம் என்பதை அறிஞர் கூறக்கேட்டுத் தெளிவடைந்து வருகிறோம்.

பதியை உணரும அறிவு மனித உயிர்களுக்கே சிறப்பாக அமைந் துள்ளது. மனித உயிர்களையன்றி மற்றைய விலங்கு- பறவை முதலான உயிர்களும் இறைவனுக்குத் தெரிந் தோ தெரியாமலோ தொண்டு செய்து முத்திபெற்றுள்ள செய்திகளைப் புராண இதிகாசங்கள் விரித்துரைக் கின்றன. எனவே உயிர்கள் எவ்வுரு வைப் பெற்றிருப்பினும், அவை இறைவனுக்கோ அவனடியார்கட் கோ பூசையும் தொண்டும் புரியும் புண்ணிய வசத்தால் முக்தி பெறுகின் றன என்னும் உண்மை புலனுகிறது.

உயிர்கள் என்றால் என்ன? அவற் றின் இலக்கணம் என்ன? அவை செய்ய வேண்டுவது யாது? என்பவற் றைப் பற்றி ஒருவாறேனும் அறிதல் அறிஞர் கடனன்றோ!

உயிர், பசு, ஆன்மா எனப்படும் மூன்று சொற்களும் ஒரே பொருளை யே குறிக்கும். உடல் இயங்குதற்கு உயிர் தேவை. உயிரின்றி உடல் தனித்து இயங்காது. அவ்வுயிர்தா னும் ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங்களால் கட்டுப் பட்டிருக்கும். எனினும் ஆன்மா என்றும் அழிவுறாது. இவ்வான்மா வைப் பற்றி ஒருசிறிது விளக்கமாக அறிய முற்படுவோம்.

ஆண்டவன் என்றுமுதல் உள்ளா னே அன்றிலிருந்தே ஆன்மாக்களும் இருந்து வருகின்றன. ஆண்டவனும் அநாதி, ஆன்மாக்களும் அநாதி. ஆண டவனை அறியும் அறிவு ஆன்மாக் களுக்கே உண்டு. ஆயினும் மும்மலங்க ளும் ஆன்மாக்கள் ஆண்டவனை அறிய வொட்டாமல் மறைத்து நிற்கின் றன. மும்மலங்களும் நீங்கப் பெற்ற ஆன்மா பிறவித் துன்பத்தினின்றும் நீங்கி முத்தியின்பத்தில் திளைக் கின்றன.

ஆன்மாக்களாகிய நாம் நம்மைப் முதலில் அறிந்து கொள்ளல் வேண் டும். நம்மைப்பற்றி ஒன்றும் அறியா மலே ஆண்டவனைப்பற்றியோ மும் மலங்கள் பற்றியோ அறிந்துகொள்ள முயலல் அறியாமையாகவே முடியும். நம்மைப்பற்றி அதாவது ஆன்மா வைப் பற்றித் தெளிவாக அறிதல் வேண்டும். அதுவே ஆத்ம விசாரணை எனப்படும்.

ஆன்மாவைப்பற்றி அறியாதவர் ஆண்டவனைப்பற்றியும் அறியமாட் டார். தம்மையுணராத பேர்கள் தலைவனுகிய இறைவனையும் உணரார் என்னும் உண்மைக் கருத்தினைத் 'தம்மையுணரார் உணரார்' என்னும் தொடரால் மெய்கண்ட தேவர் தம் அவையடக்கச் செய்யுளில் உணர்த் துகிறார்.

**ஆன்மா எனப்படுவது யாது?**

ஆன்மா எனப்படுவது காட்டலா காப் பொருள். காட்டலாகாப் பொருள் எனின் அது உள்ளது என் பதை எப்படி நம்புவது? இவ்வாறு கேள்வி கேட்பதிலிருந்தே ஆன்மா உண்டு என்பதைச் சுலபமாய்க் கூறி விடலாம். இவ்வாறு கேள்வி கேட்கச் செய்வதே ஆன்மாதான்!

அப்படியாயின் உடலை ஆன்மா என்று கூறலாமா? முடியாது. ஏனெ னின் உடல் வேறு ஆன்மா வேறு என்பது நமக்குத் தெளிவாகவே தெரிகிறது. உடலை விட்டு என்றோ ஒருநாள் ஆன்மா வெளியேறிய பிறகு அது தன் வினைக்கேற்ற வேறொருஉட லில் புகுந்து கொள்கிறது. ஆன்மா வுக்கு வடிவமோ உருவமோ கிடை யாது வடிவம் என்பது கையால் தொட்டுக் காண்பது. கணபார்வை யற்றோராலும் வடிவத்தைத் தொட் டுப் பார்த்துச் சதுரமா, வட்டமா போன்ற அமைப்பினை அறிந்து கொள்ளமுடியும். உருவம் என்பது நிறம் முதலானவற்றை உணர்த்து வது. உருவத்தை உணரக் கண பார் வை தேவை. இத்தகைய வடிவமும் உருவமும் அற்றதே ஆன்மா. எறும் புக்கும், யானைக்கும் உள்ள ஆன்மா ஒன்றே. ஆன்மா வில் பெரியது சிறியது என்ற வேறு பாடு கிடையாது. எனவே, உடல் என்பது ஆன்மா ஆகாது என்பது பெறப்படும். உடலில் உயிர் உள்ள பொழுது அறியும் அறிவே ஆன்மா எனப்படும்.

---

*திரு. மா. சீதாராமன்-காஞ்சிபுரம்.*

---

அறியும் அறிவே ஆன்மா எனப படும் எனின், ஐம்புலன்களால் தானே அறிவினைப் பெறுகிறோம். அப்படியாயின் ஐம்புலன்கள்தாம் ஆன்மாவா எனின், அன்று.

உடல் எப்படி ஆன்மாவுக்கு வேறாக உள்ளதோ, அப்படியே ஐம்புலன்களுக்கும் வேறாகவே ஆன்மா உள்ளது. மெய், வாய், கண், மூக்கு, செவி எனப்படும் ஐம்பொறிகளாலும் தொடுதல், உணர்ச்சி, சுவை, ஒளி, காற்றும், ஓசை எனப்படும் ஐம்புல அறிவு நமக்கு ஏற்படுவதில்லை. ஒரு பொறிக்கு உள்ள குணம் மற்றொரு பொறிக்கு ஏற்படுவதில்லை. மெய் எனப்படும் உடலுக்குத் தொடுதல்

உணர்ச்சி மட்டுமே உண்டு. வாய்க்குச் சுவைக்கவும், கண்ணுக்குப் பார்க்கவும், மூக்குக்கு முகரவும், செவிக்குத் கேட்கவும மட்டுமே முடியும். ஒரு பொறிக்கு உள்ள குணம மற்றொரு பொறிக்கு இல்லை என்பது கண்கூடு. எனவே ஐம்புலனகளும் வெவ்வேறானவை எனப்படுதலாலும், இவ்வைந்து புலன்களேயும் அறிகின்ற வேறு ஒன்று இருகக வேண்டும் என்பதாலும ஐம்புலன்கள ஆன்மா ஆகமாட்டா என அறியலாம். ஐம புலன்களால் ஏற்படும அறிவினை அறிவது எதுவோ அதுவே ஆன்மா எனப்படும்.

ஐம்புலன்களும் ஆன்மா அன்று எனின், ஐம்புலன்களால ஏற்படும் சப்தம், பரிசம, ரூபம், ரசம், கந்தம் எனப்படும் ஐந்தறிவும், மனம், புத்தி ஆங்காரம் எனபபடும் அநதக்கரணங்கள் மூன்றும் ஆக எட்டும கூடின சூக்கும தேகத்தை ஆன்மா என்று கூறலாமோ எனின், அன்று. சூககும தேகமும ஆன்மா ஆகாது.

நம் கண்களுககுப் புலனுகும் இந்தப் பருவுடம்பைத் தூல தேகம என்கிறோம். இத்தூலவுடம்புக்குள் செயல்படுவதாகவும், கனாகளுக்குப் புலனுகாமலும் இருப்பதே சூக்கும உடம்பு. நனவோடு ஆன்மா கூடியிருக்கும் போது தூலவுடம்பு செயல்படும். தூலதேகத்தை விட்டு சூக்கும தேகத்தோடு ஆன்மா கூடியிருக்கும் போது கனவு தோன்றும். கனவும் நீங்கிய நிலையில் நல்ல உறக்கம் கொள்ளும் போதும் ஆன்மா அறிவுடன் நிற்கும். இவ்வாறு சூக்கும உடம்பு செயற்படுஙகாலத்தும் அறிந்து நிற்கும் அறிவே ஆன்மா எனப்படுதலால், சூக்கும உடம்பு ஆன்மா எனப்படாது. சூக்கும உடம்பே ஆன்மா எனப்படுமாயின் கனவின் கண்டவையும நனவின் கண்டவையும் ஒரு படித்தாகவே இருத்தல் வேண்டும.

அப்படியாயின் பிராணவாயுவை ஆன்மா எனலாமோ எனின், அன்று பிராணவாயுவும் ஆன்மா ஆகமாட்டாது.

நாம் உறங்குமபோதும், விழித்திருக்கும் போதும் பிராணவாயு ஓடிக்கொண்டுதான் இருக்கிறது. ஆனால் உறங்கும்போது தொழில் செய்வதுமில்லை; இன்ப துன்பங்கள் தோன்றுதலுமில்லை. பிராணவாயுவே ஆன்மாவாக இருக்குமானால், உறங்கும் காலத்தும் தொழிலைச் செய்தல் வேண்டும், இன்ப துன்பங்களையும் அறிதல் வேண்டும்.

நாம் நன்றாகத் தூங்கி எழுந்த பின்பே, நன்றாகத் தூங்கினேம் என்ற உணர்ச்சி ஏற்படுகிறது. எனவே, உறக்கத்தைப் பற்றிப் பிராண வாயு ஒன்றும் அறியவில்லை என்று தோன்றுகிறது. பிராணவாயு எப்போதும் ஒரே தன்மையாகவே ஓடிக்கொண்டிருக்கும். ஆனால் ஆன்மாவோ தன்செயல் அடங்கி ஒடுக்கத்தில் நிற்கும் போது ஐம்பொறிகளும் அந்தக்கரணங்களும் செயற்படுவதுமில்லை, அறிவதுமில்லை. ஒடுக்கத்தின் கண்ணும் அறிவதுதான் ஆன்மா. மனம், புத்தி, ஆங்காரம் முதலியனவும், பிராணவாயுவும் ஆன்மாவுக்குக் கருவிகளாகவே அமைந்துள்ளன.

அறியும பொருளாக உள்ளது எதுவோ அதுவேஆன்மா எனப்படும் அப்படியாயின் அறியும் பொருளாக உள்ள பிரமத்தை ஆன்மா என்று கூறலாமோ எனின், கூடாது. ஆன்மா வேறு ஆண்டவன் (பிரம்மம்) வேறு. ஆன்மாவுக்கு மூன்று நிலைகள் உள்ளன.

1. இருட்டறைப்பட்ட குருட்டுக் குழவிபோலத் தனித்து நிற்கும் கேவலநிலை.

2. உடல்பெற்று வாழ்ந்து நிறகும் சகலநிலை.

3. முத்தியின்பம் பெற்று வாழும் சுத்தநிலை.

இவ்வாறு ஆன்மாவானது கேவலம், சகலம், முத்தி எனப்படும் மூன்று நிலைகளும் எய்திப் பாசத்தைச் சார்ந்து பாச மயமாகியும் உண்மை ஞானம் பெற்றுப் பதியைச் சார்ந்து பதிமயமாகவும் நிற்கும். இங்ஙனம் சார்ந்ததன் வண்ணமாதல் ஆன்மாவுக்கியல்பு.

இவ்வியல்புகள் எதுவுமின்றி எல்லாம் வல்லவனாய், எங்கும் நிறைந்தவனாய் இருப்பவன் இறைவன்.

## நமது பாரதம்

மஹாநதி என்பதும், ஜீவநதி என்பதும் பெயரளவில ஒற்றுமை நிறைந்தவைகளாக இருப்பினும், அனுபவக்காட்சியிலும் உள்ளார்ந்த ஆத்தபாவத்திலும் வெவ்வேறானவையாகும். வற்றாத நீரோட்டத்தைஎட்பொதுபசொன்டுள்ளது ஜீவநதி மஹாநதி என்பவைகளோ அவற்றின் ஆழ, அகலப்பரப்பளவின் விஸ்தீர்ண அளவை குறிப்பிடுபவை மஹாநதிகள ஜீவநதிகளாகவோ, ஜீவநதிகள் மஹாநதிகளாகவோ இருக்கவேண்டும என்பது நியதி அல்ல ஆனல், இவ்வாறு விளங்கும் நதிகளுககுததான் புண்ணியநதி தீரங்கள் என நமது சாஸ்திரங்கள இயம்புகின்றன. இதே போல் விஞ்ஞானப் பேரறிவும், மெய்ஞ்ஞானச் செம்மையும் கொண்டு திகழக்கூடிய நாடாக விளங்குவது நமது பாரதம் எனவேதான் இந்த நாட்டின் பெயரே, 'பாரத வர்ஷே' என்று சாஸ்திரப் பிரமாண நாமாவளியாக போற்றப்படும் பெருஞ்சிறப்பிற்கு உரியதாகத் திகழ்கிறது.

*காஞ்சி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அருளுரை.*

சிற்றறிவும் விகாரமும் உடையது ஆன்மா. இறைவனே பேரறிவும் நிர் விகாரமும் உடையவன.

பிறர் அறிவிக்க அறிவதே ஆன்மா. பரப்பிரம்மமோ தானே அறியும் ஆற்றல் உடையது.

இப்படிப்பட்ட பல்வேறு காரணங் களால் பிரம்மம் வேறு ஆன்மா வேறு என்பது தெளிவாக விளங்கும்.

அப்படியாயின் உடல், ஐம்புலன், பிராணவாயு முதலான பலவற்றின் கூட்டமே ஆன்மா எனப்படுவது, ஆன்மா என்பது தனிப் பொருளன்று என்று கூறலாமோ எனின், கூடாது.

உடம்பு, ஐம்புலன், பிராணவாயு முதலியன ஆன்மாவுக்கு உதவும் கருவிகளேயாகும். எனவே இவை ஆன்மாவாகமாட்டா.

உடம்பு முதலியன விளக்குப் போன் றவை. ஆன்மா கண போன்றது. ஒரு பொருளை அறிய விளக்கு ஒளி தந்து துணை மட்டுமே செய்யும். விளக்கு தானே ஒரு பொருளைக் காணுது. கண்தான் காணும் ஆற் றல் உடையது.

எனவே அறியும் ஆற்றல் பெற்ற கண் போன்ற ஆன்மாவுக்கு உடம்பு முதலான விளக்குப் போன்றவை துணை செய்யும் கருவிகள் மட்டுமே என்பது வெளிப்படும்

இதுவரை அறிந்தவற்றால் அறி வுடைப் பொருள் எதுவோ அதுவே ஆன்மா எனபபடும் என்பதனை ஒரு வாறு அறிந்தோம். இதனல் ஆன்மா என்பது உளள பொருளேயன்றிச் சூனியப் பொருளனறு என்பது தெளி வாகிறது.

சஞ்சலப்படுகின்ற மனமும், நிச்ச யிக்கின்ற புத்தியும், சிந்தனை செய் கின்ற சித்தமும், தான் என்கின்ற அகங்காரமும் தானே அறிகின்ற ஆற்றலின்றி, அறியப்படும் சடப் பொருளாக உள்ளதனல் அவ்வந்தக் கரணங்கள் ஆன்மாவாகமாட்டா.

ஆன்மா ஆணவமலத்தால் மறைக்கப் பட்டு அணுவாய்ப் பசுத்தன்மை உள்ளதாக-தன்னறிவு (தற்போதம்) உள்ளதாக இருப்பதால், அந்த ஆன்மா தன் உணமைச் சொரூபத்தை அறியாததாக உள்ளது.

ஆயினும் அந்தக் கரணங்கள் ஆன் மாவுடனே கூடி நிற்கும்போது பிர காசமாயும், ஆன்மா கேவலத்தில் ஒடுங்கி நிற்கும்போது பிரகாசமின்றி யும் நிற்கும்.

ஆன்மா அடையும் நிலைகள் இரண் டாகப் பகுக்கப்படும். அவை காரணு வத்தை, காரியாவத்தை எனப்படும். (அவத்தை-நிலை)

மேலே குறிப்பிட்ட கேவல நிலை, சகல நிலை, முத்தி நிலை என்பவை காரணுவத்தை எனப்படும்.

காரியாவத்தை ஐந்து வகைப்படும் அவையாவன: சாக்கிரதம் (நனவு) சொப்பனம்(கனவு) சுசுக்தி (உறக் கம்) துரியம் (பேருறக்கம்) துரியா தீதம் (உயிர்ப்படங்கல்).

இவ்வாறு ஆன்மா பற்பல அவத் தைகளை அடைதற்குக் காரணம், ஆன்மாவைப் பற்றியுள்ள ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங் களாலேயாம். பிறப்பு, இறப்பு முத லான துன்பங்களை ஆன்மா அடை தற்குக் காரணம இம்மல மறைப் பினுலேயாம்

ஆன்மா இம்மலங்களினின்று நீங் குமேயானல், பிறப்பு இறப்புத் துன் பங்களும் சாக்கிரதம் முதலான ஐந்த வத்தைகளும் நீங்கப் பெற்றுச் சதா இறைவனேடு ஒன்றி வாழும் இன்ப நிலையினை எய்தி நிற்கும்.

சார்ந்ததன் வண்ணமாகும் இயல் புடைய ஆன்மாவுக்குப் பாசத்தோடு கூடித் துன்பத்தில் அழுந்துதல் பொதுவியல்பு எனப்படும்.

ஆன்மா சிவத்தோடு கூடி இன்பத் தில் அழுந்துதல் உண்மை இயல்பு எனப்படும்.

ஆன்மாவின் பொது வியல்பைத் தடத்த லக்கணம் என்றும், உண்மை இயல்பைச் சொரூப லககணம் என் றும் அறிஞர் கூறுவர்.

ஆன்மா பாசத்தோடு கூடி அனுப வத்தைப்படும் பெத்த நிலை தடத்த லக்கணம் எனப்படும. பாசத்தின் நீங்கிச் சிவத்தோடு கூடி நிற்கும் முத்தி நிலை சொரூப லக்கணம் எனப் படும்.

ஆனமா பாசத்தினின்று நீங்குதல் எப்பொழுது நிகழும்? இறைவன் குரு வாய் வந்து ஞானத்தை அருளும் பொழுது என்பர். குரு வடிவாய இறைவன் வருதல் எப்பொழுது எனின், ஆன்மாக்கள் ஞானத்தை யுணரும் பக்குவத்தை அடையும் பொழுது என்பர். அப்பக்குவம் பெற ஆன்மாக்கள் செய்ய வேண்டுவன யாவையெனின், சரியை, கிரியை, யோகம் எனப்படும் சிவ புண்ணிய மாகிய தவத்தினை முதிரச் செய்தலே யாம்.

ஆகவே ஆன்மாக்கள் உய்யும் திரு நெறிகள் சரியை, கிரியை, யோகம் முதலான இறை புண்ணியங்களைச் செய்தலேயாம்.

பெத்த நிலை, முத்தி நிலை ஆகிய இரண்டிலும் ஆன்மாவுக்கு உடனுய் இருந்து உதவி செய்பவன் இறை வனே! எனவே இறைவனே ஆன்மா வுக்குப் பற்றுக்கோடாக இருக்கின் றன். இறைவனின் பேருபகாரத்தை மறவாது ஆன்மாக்களாகிய நாம் அவனுக்குத் தொண்டு செய்தலே செய்நநன்றி மறவாமையாம். எனவே, ஆணவம முதலான பற்றினை விடுதற்கு ஆண்டவன் திருவடிவைப் பற்றுவோமாக.

பறறுக பற்றற்றுன் பறறினை அப்
பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (திருக்குறள்)



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி
# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப் பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொது தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுரஅளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொருஅறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரணடு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொணட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும் குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொணடு விளங்கும். ஒவவொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுககான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன.

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.
2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.
3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.
4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.

# சூர்தாசரின் கிருஷ்ண பக்தி

இலக்கியம் என்பது பரந்து விரிந்திருக்கும் வானத்தைப் போன்றது. அத்தகைய இலக்கிய வானில் தங்கள் புலமையினுல் புகழ் பெற்ருேர் பலர். அத்தகைய புகழ் பெற்ற கவிஞர்களை இருவகையாகப் பிரிக்கலாம். முதலாவதாக, பெரும் அரசர்களை நாடிச் சென்று அவர்களைப் புகழ்நது பாடி பரிசுகளைப் பெற்ற புலவாகள் எனவும், இரண்டாவதாக இறைவனின் புகழ்பாடி, பக்தி வெள்ளத்தில் மூழ்கி தெய்வப் பணியாற்றிய தெய்வீகப் பேரோளியாய் தெய்வத்துடன் கலந்துவிட்ட கவிஞர்கள் எனவும் வகைப்படுத்தலாம். இவ்வாறு இறைவனை கண்ணபெருமானுக்குத் தனது பாக்களால் புகழ் மாலை சூட்டி மகிழ்ந்த ஹிந்தி இலக்கிய உலகின் கவிஞர்களில் முன்னணியில் நிற்பவர் சூர்தாசர் ஆவார்.

கதிரவனின் வரவால் காரிருள் மருண்டோடியது போல, ஹிந்தி இலக்கிய உலகில் சூர்தாசரின் வரவால் பக்தி ஒளி சுடர்விடத் தொடங்கியது. 'சூர்' எனும் சொல்லுக்குப் பொருள் விழிகளை இழந்தவன என்பதாகும். ஆம், கருத்துச் செறிவினையும், சந்த இனிமையையும் இணைத்துப் பற்பல பாடல்களை இறைவனுககுப் பாமாலையாய் சூட்டி மகிழ்ந்த சூர்தாசர் விழிகளை இழந்தவர்தான்.

சூர்தாசரின் பிறப்பு 1540-ம ஆண்டு ரேணுகா சேத்திரம் எனுமிடத்தில் நிகழ்ந்தது. இவரது தந்தையார் பெயர் இராமதாஸ் என்பது. இளவயதில் சூர்தாசரின் மனம் இறை ஞானத்தை உணராமல் இருளால் மூடிக் கிடந்தது. அவ்விருள், அவரை இன்பக் கேளிக்கைகளில அவரை ஈடுபடுத்தி வந்தது. இன்பமே தன் வாழ்வின் ஒரே மூச்சாய்க்கொண்டு சூர்தாசர் தன் இளமை வாழ்வின் பெரும் பகுதியை வீணே கழித்தார். இவ்வாறு இன்பம் என்னும் மாய வலையில் சிக்கியிருந்த அவர் அவ்வலைகளை அறுத்து சுதந்திரமாய் தெய்வப் பணியாற்றிடச் செய்யும் பொன்னுன வேளையும் வந்தது. அது அவரது வாழ்வின் பெரும் திருப்பு முனையாய் அமைந்த தோடல்லாமல் பக்தி உலகிற்கு ஓர் பகலவனுய் அவரை நிலை நிறுத்தியது.

ஒருநாள் சூர்தாசர் மலர்கள் பூத்துக் குலுங்கும் அழகிய பூஞ்சோலை ஒன்றில் அமர்ந்திருந்தார். அப்போது அவரது கவனம் அவருக்கு வெகு அருகே நின்றிருந்த அழகிய பெண்ணின் மீது திரும்பியது. அழகின் மொத்த உருவமாய் விளங்கிய அப்பெண்ணை சூர்தாசர் வியப்புடன் தன்னையே மறந்து மயங்கி நின்றவராய் இருந்தார். சூர்தாசர் தன்னையே பார்ப்பதை உணர்ந்த அவ்வழகி அவரருகே நெருங்கி வந்து, ''தங்களுக்கு என்ன வேண்டும்?'' என வினவினுள். மகரயாழினின்று கிளம்பிய நாதத்தைப் போல விளங்கிய அப்பெண்ணின் இனிய குரலினைக் கேட்டவுடன் தன்னிலை உணர்ந்த சூர்தாசர் சித்தம் தெளிந தார். அவ்வினிய குரல் தெய்வத்தின் குரலே என்று முடிவு செய்தார். மாய வலையினின்று விடுபட்ட அவரது மனம் இத்தனைக் காலமும் இன்பக் கேளிக்கையில் ஈடுபட்டு வீணே காலத்தைக் கழித்ததை எண்ணி வருந்தியது. இதுவரை அவரது உள்ளத்தில் குடிகொணடு தன் விருப்பம்போல் ஆட்டிப்படைத்துக்கொண்டிருந்த மாயை அப்பெணணின் வினுவினுல் அவரது உள்ளத்தை விட்டோடியது.

அப்பெண்ணின வினுவிற்கு விடையளிக்க எண்ணிய சூர்தாசர் அப்பெண்ணிடம், ''எனக்கு இரண்டு ஊசிகள் வேண்டும்'' என்ருர். அப்பெண்ணும் அவரிடம இரு ஊசிகளைத் தந்தாள். ஊசிகளைப் பெற்ற சூர்தாசா, இன்பக கேளிக்கையில் ஈடுபடுததுகின்ற—காமக் காட்சிகளைக் காட்டுகின்ற தனது இரு கண்களிலும் அவற்றைச் செருகிக் கொண்டார். அக்கணம் முதல் சூர்தாசர் புறக்கண கொண்டு புற உலகினைக் காணும் வாழ்விற்கு முற்றுப்புள்ளி வைத்தார். இவ்வாறு அவர் தம் கண்களில் செருகிக கொண்ட ஊசி

---

திரு. கே. இராமநாதன், பி.ஏ.,
சேலம

---

மனத்தில் தேங்கிக் கிடந்த காம எண்ணங்களையும் துளைத்து உள்ளத்தை தூய்மைபபடுத்தியது. அத்துடன் தெய்வீக உணர்வு எனும தீபத்தை அவரது உள்ளத்தில் ஏற்றியது.

ஆணவம் எனும் கிழங்கைத் தோணடி எடுத்த அன்பர்களின் உள்ளத்தில் அன்னை மீனுட்சி குடியமர்வாள் என்று குமரகுருபரர் கூறுகின்ருர்;

'' அகந்தைக கிழங்கை அகழ்ந்து
எடுக்கும்
தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும்
விளக்கே ''

என்பது குமரகுருபரரின் பாடல். அதுபோலவே காம இச்சைக்குக் காரணமாய் விளங்கிய தன் கண்

களை த தோண்டி எடுத்த சூர்தாசரின் உள்ளத்தில் கண்ணன் குடியமர்ந் தான். கண்ணனின் மீது ஏற்பட்ட பிரேமையினால் அவனைத் தேடி பிருந் தாவனத்தை அடைந்த அவர் இரவு, பகல் எனப் பாராது கண்ண னின் புகழைப் பாடுவதிலேயே காலத்தைக் கழித்தார். உறக் கத்தை மறந்தன அவர் கண்கள்; பசியை மறந்தது அவா வயிறு. ஆனால் உள்ளமோ எந்நேரமும் கண்ணபெருமானின் புகழைப் பாடு வதில் சற்றும் சளைக்கவில்லை. இவ் வாறு பக்தி மயமாய் மாறிய அவரது உள்ளத்தினின்று சிதறிய பக்திச் சிதறல்களில் சில துளிகளைக் காண போம.

'கண்ணனைத் தவிர்த்து தனக்கு வேறு சுகம் இல்லை; சுகமும் கண்ண னும ஒன்றே' என்று சூர்தாசர் பாடு கின்றார். அவர் கண்ணனிடம், 'இறைவா! உன்னையல்லால் எனக்கு வேறு சுகம் இல்லை. உன்னை விடுத்து என்மனம் எங்குச் சுகத் தைப் பெற இயலும்? கடல் நடுவே செல்லும் கப்பலின் மேல் அமர்ந் திருக்கும் பறவை அக் கப்பலை விட்டு நெடுந்தூரம் பறந்து சென்றாலும் கரையினை அடைய இயலாமல் இறு தியில் தான் முன்பு அமர்ந்திருந்த அதே கப்பலின் மேல்தான் வந்து அமரும். அதைப் போலவே என் இதயமும் பிற எண்ணங்களினால் அலைக்கப்படினும் உனது திருத்தாம ரைப் பாதங்களை விட்டு என்றும் நீங் காது' என்கிறார்.

சூர்தாசர் ஹிந்தியில் பாடிய இப் பாடலின் கருத்து, இசைத் தமிழால் இறைவனும் திருமாலின் புகழ் பாடிய குலசேகர ஆழ்வாரின் பாடல் ஒன்றிலும் அப்படியே அமைந்துள் ளது.

வெங்கண்திண் களிறு அடர்த்தாய்
வித்துவக்கோட் டம்மானே!
எங்குப் போய் உய்கேன் உன்
இணையடி அடையலல்லால்?
எங்கும்போய்க் கரை காணாது
எறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும்
மாப்பறவை போன்றேனே.

என்கிறார் குலசேகரப் பெருமான். இதையே சூர்தாசரும்,

"मेरो मन अनत कहाँ सुख पावै ?
जैसी उडी जहाज को पछी, फिरि जहाज पै आवै"

எனக் குறிப்பிடுவதிலிருந்து இரண் டுக்கும் பெருத்த ஒற்றுமை இருப்ப தைக் காணலாம். இவ்வாறு வித்து வக்கோட்டுப் பெருமானைப் பாடிய குலசேகரப் பெருமானின் உள்ளக் கருத்தும், பிருந்தாவனத்தில் கண்ண னின் புகழைப் பாடிய சூர்தாசரின் உள்ளக் கருத்தும் ஒருங்கிணைந்து நிற்கிறது.

கண்ணனின் பெருமையைப் பாடு வதில் திளைத்து நின்ற சூர்தாசர் இறைவனின் பெருமையை உவமை களால் அலங்கரித்துப் பாடுவதில் தன்னிகரற்று விளங்குவதைக் காண லாம.

'மனமே, நீ கண்ணனை வணங்காத வர்களுடன் தொடர்பு கொள் ளாதே. அத்தகையவர்களுடன் தொடர்பு கொண்டால் உனது பக்தி யில்தான் பங்கம் ஏற்படும். அத்த கைய கொடியவர்களைத் திருத்தலாம் என்பதும் வீணான செயலே. பாம் பிற்குப் பால் வார்ப்பின் அது தன் விஷத்தை விட்டுவிடுமா? குரங்கை அழகான ஆபரணங்களால் அலங் கரித்தாலும் அது ஆபரணங்களின் பெருமையை அறியுமோ? கற்பாறை யின் மீது அம்பைக் கொண்டு தாக்கி னால் அதனால் அம்பு உடையுமே தவிர கற்பாறை பெயராது. அது போலவே கண்ணனை வணங்காதவர் களைத் திருத்தலாம் என்று எண்ணுவ தும் பயனற்ற செயலே' என்கிறார்.

கண்ணன் அனைவரையும் சமமாக எண்ணுபவன் என்கிறார் சூர்தாசர். ஏழை, பணக்காரன்; மேலினம், கீழி னம் எனும் பாகுபாட்டை இறை வன் பார்ப்பதில்லை என்பதை அழ கிய உதாரணத்துடன் விளக்குகிறார்.

"हमारे प्रभु, मेरे अवगुन चित न धरो
इक लोहा पुजा में राखत, इक घर बधिक परो ।

यह दुविध पारस नहिं जानत, कंचन करत करो ॥"

இரும்பினைத் தங்கமாய் மாற்றும் திறன் கொண்டது பாரஸமணி எனும் கல். அக்கல்லில், இறைவனின் கோவிலில் வைத்து பூசிக்கப் பட்ட இரும்புக் கம்பியையும், ஆட்டினை வெட்டும் கத்தியையும் தேய்த்தால் அது இரண்டையுமே தங்கமாய் மாறும். பாரஸ மணிக்கல், ஆட்டினை வெட்டும் இழிந்த கத்தி என்றோ, கோவிலில் நெடுநாள் வைத்து பூசிக்கப்பட்ட சிறப்பான இரும்பென்றோ பேதம் பார்ப்பதில்லை. அதைப்போன்ற குணத்தைக் கொண்டவனே கண்ணபெருமான் என்பதை சூர்தாசர் சுட்டுகின்றார்.

சூர்தாசர் கண்ணனை மழலை மொழி பேசும் பாலகன் வடிவில் கண்டு பாடுகிறார். கண்ணனைக் குழந்தையாகக் கண்டு பாடுவதில் தான் அவருக்கு எத்தனை ஆனந்தம்! எவ்வளவு மகிழ்ச்சி!

கண்ணன் தன் தாயான யசோதையின் முன்பு குற்றவாளி போல் நிறுத்தப்பட்டிருக்கிறான். அவன் தாய் அவனிடம், 'வெண்ணெய் திருடி உண்டாயா? ஏன் திருடினாய்?' என வினவுகிறாள். அதற்கு சிறுவனான கண்ணனின் பொய் கலந்த சுட்டித்தனமான பதிலைப் பாருங்கள்: 'அம்மா! நான் வெண்ணெயைத் திருடவும் இல்லை, அதைத் தின்னவும் இல்லை விடியற்காலைப் பொழுதில பசுக் கூட்டங்களின பின்னே சென்றுவிடும் நான் மாலைப்பொழுது வரையிலும் வேயங்குழலில் நாதத்தை எழுப்பிக்கொண்டிருப்பேன். பின்பு மாலையானதும் பசுக்களை ஓட்டிக்கொண்டு வீட்டிற்கு வருவேன். அவ்வாறிருக்க நான் எப்படி வெண்ணெயைத் திருடி உண்ண முடியும்? மேலும் நானோ சிறுவன். என் கைகளின் உயரமோ குறைவு. மேலே உரியில் வைக்கப்பட்டிருக்கும் வெண்ணெய்யை நான் எவ்வாறு எடுக்க இயலும்? இங்கு எனக்குப் பகையாய் உள்ள இடைச் சிறுவர்கள்தான் வேண்டுமென்றே என் வாயில் வெண்ணெயைக் கொண்டு வந்து தடவிவிட்டு நான் திருடி உண்டதாய் உன்னிடம் பொய் சொல்லி உள்ளனர். நீயோ மனத்தில் கள்ளம் கபடம் அறியாதவள். அவர்களின் பேச்சை நம்பி என்னை இவ்வாறு மிரட்டுகிறாய்'? என்று கண்ணன் பதில் கூறுகிறான்.

கண்ணனைக் குழந்தையாயக் கண்டு பாடிய சூர்தாசரின் மனம் இப்போது காதலனாகக் கண்டு கோபியர் பெண்களின் நிலையில் நின்று பாடுகின்றது. கண்ணனிடம் காதல் கொண்டனர் கோபிப் பெண்கள். ஆனால் கண்ணனோ அவர்களை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. இதனால் மனமுடைந்த அவர்கள் வருந்திக் கூறுகின்றனர்! 'விட்டில்பூச்சி எரியும் விளக்கின் மீது காதல் கொண்டு இறுதியில் அதிலேயே விழுந்து தன் உயிரை விடுகின்றது. வீணையின் இனிய நாதத்தைக் கேட்டு மயங்கிய மான் வேடனின் அம்புக்கு தன் உயிரை பலிகொடுக்க நேரிட்டது. அதுபோல் நாம் கண்ணனிடம் காதல் கொண்டோம். ஆனால் அவனோ நம்மையெல்லாம் தவிக்க விட்டு இந்தக் கோகுலத்தை விட்டே சென்று விட்டான்' எனப் புலம்புகின்றனர்.

கண்ணனைக் குழந்தையாகவும, காதலனாகவும் பாடிய சூர்தாசரின் பாடல்களைக் காணும்போது,

'தீராத விளையாட்டுப் பிள்ளை' என்றும்,<br>
கண்கள் உறங்கவொரு காரணம் உண்டோ<br>
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே?

என்றும் கண்ணனைக் குழந்தையாயும், காதலனும் கொண்டு பாடிய பாரதியாரின் பக்தி உள்ளம் நம நினைவிற்கு வருகிறது.

கண்ணனின் புகழைத் தம் அழகிய கவிதைகளால் அழியாச் சித்திரமாய் நெஞ்சில் பதியச் செய்துள்ள சூர்தாசரின் பெருமையை பக்தி உலகம் என்றும் மறக்காது.

★

## புரோஹித் சங்கம், திருமலை
### கட்டண விவரங்கள்

| | ரூ. பை. |
|---|---|
| பிராமணர் மற்றும் வைசியர் திருமணம் | 50–00 |
| பிராமணர் மறறும் வைசிய உபநயனம் | 40–00 |
| மற்றைய திருமணங்கள் (ஹோமம் இலலாதது) | 30–00 |
| மற்றைய திருமணங்கள் (ஹோமத்துடன் அல்லது கன்யாதானத்துடன் நடைபெறுவது) | 36–00 |
| சத்ய நாராயண விரதம் | 20–00 |
| கேஸ கண்டனம் மற்றும் மற்றைய பூசைகள் | 10–00 |
| பிண்ட பிரதானம் | 5–00 |
| ஹிரண்ய கோதானம் | 6–00 |
| அன்னதானம் | 3–00 |
| சாலக்ராம தானம் | 1–25 |
| சங்கல்பம் | 1–00 |
| ஸோடஸ மகாதானம் | 16–00 |
| தஸதானம் | 10–00 |
| நவக்ரஹ தானம் | 9–00 |
| சங்கல்பம், பூசை | 1–00 |

வால்மீகி முனிவரால் வடமொழியில் எழுதப்பட்ட இராமரின் வரலாறு பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே நம் நாடு முழுவதும் பரவியிருந்தது. தமிழகத்தில் தோன்றியுள்ள மிகப் பழைய நூல்களில் இராமாயாணத்தில் இடம் பெற்ற பல நிகழ்ச்சிகள் குறிப்பிடப் பட்டுள்ளன.

**தொல்காப்பியம்:**

தமிழில நமக்கு முழுமையாகக் கிடைத்துள்ள நூல்களில் பழமையானதான தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று பகுதிகளில் தமிழ் இலக்கணம் பற்றி விரிவாக எடுதது உரைககிறது.

தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் பல இடங்களில் இராமாயண நிகழ்ச்சிகளை மேற்கோளாகக் காட்டுகிறார்.

அரச குமாரர்கள் விசுவாமித்திரருடன் மிதிலை நோக்கிச் செல்லுகையில் அரச மாளிகையின் உப்பரிகையிலிருந்த சீதையின் கணகளும் இராமரது கணகளும் கலந்தன; இருவரின் உள்ளங்களும் ஒன்றாயின. இந் நிகழ்ச்சியை விளக்கும் ஒரு பாடலை நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டுகிறார்.

'' ஆளவினை முடித்த அருநதவ முனிவன்
வேள்வி போறறிய இராமன, அவனேடு
மிதிலை மூதூர் எய்திய ஞான்றே
மதியுடம பட்ட மாககண் சீதை
கடுவிசை வில்ஞாண் இடியொலி கேளாக்
கேட்ட பாமபின வாட்டம எய்தித்
துயிலெழுநது மயஙகினள்''

(பொருள் 54 உரை)

வரிசிலை அணணலும் வாட்கண் நங்கையும் ஒருவரை ஒருவர் நோக்கிய பின் பாசத்தால் பிணைநது உள்ளம் ஈர்ந்த நிகழ்ச்சியைக் கம்பர் பாடியதற்கு இப்பாடலே வழி கோலியது போலும.

புறத்திணையியல் வாகைத் திணையில் ''கட்டில் நீத்த பால'' என்ற பகுதி உள்ளது அரசர் முடியைத் துறந்த நிகழ்ச்சியை இத்துறை குறிப்பிடுகிறது. இதறகு உதாரணமாகக் கைகேயி வஞ்சனையால் பெற்ற அரசைப் பரதன் துறந்த நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டுள்ளது. நச்சினார்க்கினியர் மேற்கோளாகப் பின்வரும் பாடலை எடுத்துக் காட்டுகிறார்.

'' கடலும மலையும தேர்படக் கிடந்த
மண்ணக வளாகம் நுண்வெயில் துகளும்
நொய்தால் அம்மதானே! இல்தெவன்
குறிததனென் நெடியோன் கொலலோ? மொய்தல
வாங்குசிலை இராமன் தமபி, ஆங்கவன்
அடிபொறை ஆற்றின அலலது
முடிபொறை ஆறறலன் படிபொறை குறிததே''

புறத்திணைகளுள் ஒன்றான உழிஞைத் திணையில் கொள்ளார் தேஎம குறிதத கொற்றம் எனற துறை உள்ளது; பகைவரது நாட்டைக் கைப்பற்றுவதறகு முன்னமே அந்நாட்டை வென்றவர் போல அதை வேறு ஒருவருககு உரிய தாகக் கொடுககும செயலை இத்துறை குறிககிறது. இதறகு உதாரணமாக இராவணனை வெனறு இலங்கையைக கைப்பறறியதற்கு முன்னமே இராமபிரான் அநநாட்டை விபீஷணனுககு உரியதாகக கொடுத்த செயல கூறப்பட்டது.

அதே திணையில் 'தோலது பெருக்கம்' என்ற ஒரு துறை இடம் பெறுகிறது. கேடயம், கிடுகு ஆகிய ஆயுதங்களை ஏநதிய வீரர்கள் எதிரியின் கோட்டையைத் தாக்கி, மதில் காப்போர் எறிந்த ஆயுதங்களைத் தடுத்துப போர்புரிந்த நிகழ்ச்சி இத்துறையில் அடங்கும. இராமபிரான் வானரப் படைகளுடன் இலங்கையை முற்றுகையிட்ட சம்பவம் இதற்கு எடுத்துக்காட்டு. இந்நிகழ்ச்சிக்கு மேற்கோளாக இப்பாடல் உள்ளது.

இருசுடர் இயங்காப் பெருமுது இலங்கை
நெடுநதோள் இராமன் கடந்து ஞான்றை
எண்கு இடை மிடைநத பைஙகட் சேனையில்
பச்சை போர்த்த பலபுறத் தண்ணடை
எசசார் மருஙகினும் எயிறபுறத்து இறுத்தலின
கடலசூழ அரணும் போனறது
உடலசின வேந்தன முறறிய ஊரே''

புறத்திணையான வஞ்சியில் ''அழி படை தட்டோர் தழிஞசியோடு தொகைஇ'' என்ற துறை உள்ளது. போரில் படைக்கலம் இழநது நிராயுதபாணியாக நிறகும பகைவனைத் தாக்காமல், அவன்மீது பரிவு கொணடு நண்பனுகப் பாவிக்கும் செயல் இதது றையில் அடங்கும். போர்க்களததிலே சகல ஆயுதங்களையும் இழநது நின்ற இராவணனை மாய்ககாமல ''இனறு போய் நாளை வா'' என இராமன அவகாசம் அளித்த செயலை இத்துறைக்கு ஓர் உதாரணமாக எடுதது்க் காட்டப்படுகிறது.

**சங்ககால நூல்கள்—**
**எட்டுத் தொகை:**

சங்க காலததில் இயற்றப்பட்ட பாடலகளின் தொகுப்பான எட்டுத்

35ம் பக்கம் பாரகக

# ★ சங்க இலக்கியங்களில் இராம காதை ★

திரு. எம். ராஜகோபால், எம். ஏ.
சென்னை



# நுந்தையாய் பொலிந்த எந்தை

திரு. வ. கோவிந்தன், எம். ஏ.,
புதுப்பேட்டை.

இராமனின் மேன்மைக்கு எத்தனையோ காரணங்கள் இருந்த போதிலும் அவன் மறறவர்களிடம் காட்டுகின்ற அனபே மூலகாரணம் எனலாம். எத்தனையோ இடுக்கண்கள் வந்துற்றபோதுகூட அவனின் அன்பு மிக்க குணம் அருள் வழங்கும் போக்கிலேயே அமைந்திருக்கிறது. அவனுடைய சிறப்புமிக்க அக்குணச் சிறப்பை எண்ணி வியவாதவர் இல்லை எனலாம் அவன் மற்றவர்களிடம் கொண்டிருந்த பாசத்திற்கு எல்லையே இல்லை எனலாம். அவன் பிறரிடம் காட்டுகின்ற அன்பின் மேன்மையை அவனின் வார்த்தைகள் வெளிப்படுத்துகின்றன. அவன் அன்பு செலுத்தியவர்களிடம் குறிப்பிட்டுச் சொல்லும்படியானவர்களில் வீடணனும் ஒருவன். ஆழ்வார்கள் இராமனின் என் அரும் குணங்களை எண்ணியெண்ணிப் பாடி இன்புறுவார்கள்.

அவ்வாறு பாடும் போது வீடணனையும் பாடியுள்ளனர். அரக்கர்களிடமும் அவர்கள் தலைவனான இராவணனிடமும் யுத்த தர்மத்தை மீறாமல் நடந்து கொண்ட இராமன் அவன் தம்பியான வீடணனிடம் பாசம் மிக்கவனாக நடந்து கொணடிருக்கிறான். அவன் அடைக்கலம் நல்கிய வீடணனைப் பற்றியும் தம் பாசுரங்களில் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்கள்.

தன் எதிரியின் தம்பியான வீடணனை ஏற்றுக் கொணடது மட்டுமின்றி அவனைத் தம்பியாக ஏற்கின்ற அந்த நிலை இராமனின் குண மேம்பாட்டை மேலும் மேலும் மிக உயர்வாகச் சித்தரிக்கின்றது. வீடணனுக்கு அவன அருள் புரிந்ததை,

> கலலார் மதிள்சூழ் கடியிலங்கைக்
> காரரக்கன்
> வல்லாகம கீள வரி நெஞ்சுரம் துரந்த
> வில்லானை செல்வ விபீடணறகு
> வேறாக
> நல்லானை நாடி நறையூரில்கண்டேனே
> —பெரிய திருமொழி-6-8-5

என்று பாடுகின்றார். இப்படி வியந்து பாடும் வண்ணமாய் வீடணனுக்கு எப்படி இராமன் அருள் புரிந்தான என்பது எண்ணிப் பார்க்க வேணடிய ஒன்று

அன்பின் முதிர்ச்சியால் இராமன குகனைத் தன் தம்பியாய் ஏற்றுக் கொள்கிறான். பின்னர் சுக்கிரீவனைத் தன் தம்பியாய் ஏற்றுக்கொள்கின்றான். எத்தகைய சூழ்நிலையில் எப்படி ஏற்றுக் கொள்கிறான் என்பது எண்ணிப்பார்க்கத் தகுந்த ஒன்று.

தன்னுடைய தாரத்தைக் கவர்ந்து சென்ற இராவணனை வெல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் இராமன் கடற்கரையை அடைகிறான். மிக்க கொடிய சூழ்நிலை. அச்சூழ்நிலையில் வீடணன் இராமனிடம் வருகிறான். இராவணனின் ஏற்பாட்டால்தான் வீடணன் வந்துள்ளான் என்றும் அவன் இராம இலக்குமணர்களைக் கொல்லவே வந்துள்ளான் என்றும் முதலில் தவறாக வானர சேனைகள் எண்ணி விடுகின்றனர். பின்னர் அனுமன் மூலம் அவன் அடைக்கலம் அடையவே வந்துள்ளான் என்ற உண்மை தெரிகின்றது

அவனுக்கு அடைக்கலம் கொடுக்க வேண்டாம் என்று சுக்கிரீவன் சொல்கிறான். ஆயினும் அனுமனுடைய நியாயமான வாதத்தின் மூலம் இராமன் வீடணனுக்கு அடைக்கலம் கொடுக்க முன்வருகிறான். அனுமனே வீடணனை அழைத்து வருகிறான். வீடணன் இராமனின் பாதங்களில் பணிகிறான். இராமன் அவனை இருக்கையில் அமர்த்துகிறான். உடனே இராமன தம்பி இலக்குவனிடம் இலங்கை நகரத்தை அவனுக்கு முடிசூட்டு என்கிறான

அப்போது வீடணன் இராவணனுடன் நான் பிறந்த பிறப்பு நீங்கும்படி பரதனுக்கு அளித்த மகுடத்தையே எனக்கும் சூட்ட வேண்டும் என்கிறான். அவன் அன்பின் பெருக்கை உணர்ந்த இராமன் அவனைத் தன் தம்பியாக ஏற்றுக் கொள்கிறான். அப்போது அவன் சொல்கின்ற வார்த்தை நினைந்து நினைந்து நெஞ்சை உருக்குவதாய் அமைந்துள்ளது.

இராமன் இந்த இடத்தில், குக னோடு ஐந்து பேர்களானோம் பின் னர் குன்றிலே வாழ்ந்த சுக்கிரீவ னோடு ஆறு சகோதர்களாய் மாறி னோம். என்னிடத்தில் கொண்ட அன்பின் காரணமாய் வந்த ஐயனே! உன்னோடு நாங்கள் ஏழு பேர்களா னோம் என்கிறான். உன்னுடைய தந் தையான தயரதன் புகுதற்கு அரிய காட்டை இடமாக எனக்குத் தந்த மையால் புதல்வர்களால் பொலிந்து சிறப்புடையவனாய்த் தோன்றுகிறான் என்கிறான்.

குகனொடும் ஐவர் ஆனேம முன்பு;
பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்;
எம்முழை அன்பின் வந்த
அகன் அமர் காதல ஐய!
நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகலரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான நுந்தை
—கம்ப-வீடணன்-144.

தன்னுடைய தந்தையான தயரதன் என்கிறான். வீடணன் தந்தையான தயரதன் என்கிறான். இராமனுடைய தந்தையான தயரன் எப்போது வீட ணனின் தந்தையானான்?

கானகத்திற்கு இராமன் வந்ததால் பலவிதமான நன்மைகள் பிறர்க்கு ஏற்படுகின்றன. அவதார நோக்கம் நிறைவேறும் பொருட்டு கானகம் அடைந்தாலும் சபரிக்கு அருள் கொடுக்கிறான். பிறன்மனை நயந்த வாலியைக் கொல்கிறான். இது போன்ற பல நன்மைகள் பலருக்கு விளைகின்றன.

அதனால், புகலரும் கானம் தயர தன் எனக்குத் தந்தான் என்கிறான். அத்தகைய காட்டை இராமனுக்கு தந்ததின் மூலமாய் பெரும் பயனை தயரதன் அனுபவிக்கிறானும். புத்திரப் பேறு பெற்றுக் கொண்டு இன்னும் சிறப்படைகிறானும்

'யான் வனம் புகுந்தது எம்மு டைய புண்ணியத்தால்' என்று தண்ட காரணய முனிவர்களுக்குக்கூறியவன் இங்கு தயரதன் என்னைக் காட்டிற்கு அனுப்பி புதல்வரால் பொலிந்தான் என்கிறான். அவ்வாறு அவன் காட் டிற்கு அனுப்பியது பெருநன்மைக்கே என்கிறான் புதல்வரால் பொலிவ தற்காகவே தன்னைக் காட்டிற்கு அனுப்பி வைத்திருப்பது போல் பேசு கிறான்.

குகனைக் குறிப்பிடும் போது 'அன் புளாய் இனி நாமோர் ஐவரானோம்' (அயோத்தி-கங்கை-74) என்கிறான். சுக்கிரீவனைக் குறிப்பிடும் போது 'நின்னோடு உற்றவர் எனக்கும் உற் றார். உன்கிளையெனதென் காதற் சுற்றமென் சுற்றம் நீ என் இன்னு யிர்த் துணைவன்' (-கிட்கிந்தா காண் டம்) என்றான். ஆயின் இங்கோ அவர்கள் நிலையிலே இருந்து வேறு பட்டு சகோதரன் என்று சொன்ன தோடு மட்டுமின்றி தன்னுடைய தந் தையான தயரதனை வீடணனுடைய தந்தை என்றே குறிப்பிடுகிறான்.

வீடணனுடைய தந்தையான தய ரதன் இராமனைக் காட்டுக்கு அனுப் பினான் என்று சொல்வதின் மூலம் இராமன் எவ்வளவு உயர்ந்த நிலை யைப் பெறுகிறான். அவன் தன்தம்பி பரதனுக்கு ஒக்க ஓர் உடன் பிறந் தானாகக் கொண்டமை இதிலிருந்து தெரிகின்றது. எந்தை என்ற சொல் லைக் கையாளாமல் நுந்தை என்று கையாண்டுள்ளமையால் வீடணனுக்கு மட்டுமின்றி மக்கட் குழுவிற்கே அன் பின் திறத்தையும் சகோதரத்தன்மை யையும் வெளிப்படுத்துகிறான் என்ற வண்ணம் அமைந்துள்ளதை அறி கிறோம். இத்தகைய சிறப்பான பேச்சை அவனைப் பெற்ற தாயிடமும் காண்கிறோம்.

இது போன்றே கோசலை பேசிய தாயும் கம்பர் ஓரிடத்தில் குறிப்பிட் டுக் காட்டுகின்றார் இராமனைக் காணும் பொருட்டு பரதன், குகன், கோசலை, கைகேயி, சுமத்திரை ஆகி

## கரி வலம் வந்த கடவுள்

எல்லாம் வல்ல இறைவனை மனிதர்கள் தவிர ஏனைய உயிரினங் களும் வழிபட்டு வாழ்ந்தன என்பதற்கு இன்றும் சான்றுகள் உள் ளன. பாண்டிய மன்னர்கள் காலத்தில் தமிழ்நாட்டில் தற்போதைய திருநெல்வேலி மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியில் இருந்த காட்டுப் பகுதிக்கு குலசேகர பாண்டியன் என்னும் மன்னன் வேட்டையாடச் சென்றான். அப்பொழுது அங்கு எதிர்பட்ட ஒரு யானையைத் துரத்தினான். அந்த யானை ஓடிப்போய் ஒரு புதரை வல மாகச் சுற்றி வந்து பின்பு மறைந்தது. அதுகண்ட அரசன் திகைத்து அந்தப் புதரை நீக்கிப் பார்த்தபொழுது அங்கே ஒரு சிவலிங்கம் இருக்கக்கண்டான். யானை வலம்வந்த சிவலிங்கம் என்பதை உணர்ந் தான். அது காரணத்தால் பாண்டிய மன்னன் அந்த காட்டுப்பகுதி யை அழித்து அங்கு ஒரு சிவன் கோவிலையும், கோவிலைச் சுற்றி ஒரு ஊரினையும் அமைத்தான். யானை (கரி) சிவனை வலம் வந்த காரணத் தால் அவ்வூரை கரிவலம் வந்த நல்லூர் எனப் பெயரிட்டு அழைத் தான். அவனுக்குப் பின்பு வந்த பாண்டிய மன்னர்களும் அந்தக் கோவிலைப் பாதுகாத்து வந்தனர். இத்தலம இன்று திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரன் கோவில் தாலுகாவில 'கரிவலம் வந்த நல் லூர்'' என்ற பெயராலேயே உள்ளது. சுவாமியின் பெயர் பால்வண்ண நாதர். அம்மையின் பெயர் ஒப்பிலம்பிகை. இறைமாட்சியை விளக்கும் இத்தலம் வணங்கவேண்டிய, மற்றும் பாதுகாக்கப்பட வேண்டிய ஒரு சிவத்தலமாகும்.

தகவல் : முடிவை முத்து.

போர் கங்கை ஆற்றைக் கடந்து செல்ல ஒரே படகில் வருகின்றனர். அப்போது தம் தாய்மார்களைப் பரதன் குகனிடம் அறிமுகப்படுத்துகிறான். கோசலையை முதலில் குகனுக்கு அறிமுகப்படுத்துகிறான் பரதன். அவள் துயர நிலையில் இருந்தாலும் அவள் கூறுகின்ற வார்த்தை தவறு செய்துவிட்ட கைகேயி உட்பட்ட அனைவரையும் சமாதானப்படுத்தும் வண்ணம் அமைந்துள்ளது.

அவள் உயர்ந்த பண்புகளை உடையவள் என்பது கோசலையின் ஓரிரு வார்த்தைகளாலேயே புரிந்து கொள்ள முடிகின்றது. இராம இலக்குமணர்கள் காடு போனதும் நலமாயிற்று என்கிறாள். அவ்வாறு காடு போனதால்தான் குகன் போன்ற மிகச்சிறந்த வீரன் அவர்கட்கு சகோதரனாகக் கிடைத்தான் என்கிறாள். அவன் காட்டிற்குச் சென்றது நலமாயிற்று என்பதால் கைகேயியின் துயரம் நீங்க சற்று காரணமாகிறது அச்சொல்.

அதுமட்டுமின்றி அப்படகில்உள்ள அனைவரும் மகிழும்படி அமைந்திருந்தது அவள் வார்த்தை. குகனும் மகிழ்கிறான் குகனின் பண்பு நலன்கள் பரதனைக் கவர்ந்தது போலவே கோசலையையும் கவர்ந்ததையும் அறிகிறோம். எவ்வளவு அருமையான சொற்களை கோசலை உச்சரிக்கிறாள் என்பதை இவ்விடம் எண்ணிப்பாருங்கள்.

''நைவீர் அலீர் மைந்தீர்; இனித் துயரால்
நாடி றநது காடு நோக்கி
மெய் வீரர் பெயர்த்ததுவும நலமாயிற்றும்
அன்றே விலங்கல திண் தோள்
கைவீரக் களிறனைய காளையிவன்
தன்னோடு கலந்து நீங்கள்
ஐவிரும் ஒருவீராய் அகலிடத்தை
நெடுங்காலம் அளித்தீர் என்றாள்''
(அயோ-கங்கை-66)

இங்குக் காணும் கோசலையின் கூற்றும் எத்தனை சிறப்பாய் அமைந்துள்ளது. 'நலமாயிறறு' எனற சொல்லால் கோசலை குறிப்பிட்டதைப் போன்றே வீடணனை தம்பியாய் இராமன் ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாய் 'நுந்தை' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறான் நுந்தை என்ற வார்த்தையில் பொருள் சிறந்து நின்று அவனின் தூய அன்பின் திறத்தை மிக உயர்ந்த நிலைக்கு எடுத்துச் செல்கிறது. இப்படி இவர்கள் கூறுவதின் மூலம் இவர்களின் குணமேம்பாடு மேலும் சிறப்புற அமைந்து தூய அன்பிற்குரியவர்களாய் படிப்பவர் நெஞ்சில் அருமையாய் நிற்கிறார்கள்,

இப்படி சிறப்புற தன் குணமேம்பாட்டை இராமனிடமும் அவனைப் பெற்றெடுத்த தாயிடமும் காண்கிறோம். இராமன் 'நுந்தை' என்று சொல்லி வீடணனின நெஞ்சை நெகிழ வைக்கிறான். அதோடு அச்சொல்லை அவன் கூறுவதின் மூலம் கங்கைக் கரையில் அவன்தாய் கூறிய கூற்றையும் மெய்ப்பிக்கின்றான்.

இளையவன் கவித்த மோலி என்னையும் கவித்தி என்ற வீடணனின் விண்ணப்பத்தை ஏற்றுக்கொணட முறையிலே இராமனின் கூற்று அமைந்துள்ளது. அவனைத் தமபியாக ஏற்றுக கொணடதோடு மட்டுமின்றி ஒருபடி மேலே சிறப்புச் செய்யவே 'நுநதை' என்ற சொல்லைக் கையாள்கிறான்.

அதனால்தான் வீடணன, 'தலைவனே! நாயினும்இழிந்த என்னை உன் உடன் உதித்தவர்களோடு ஒருவன் என்று உரைத்தாய். இப்போது நான் என்ன சொல்ல முடியும்? உன்னுடைய அடியவனான தன்மையினால் மேம்பாடு அடைகிறேன்' எனறுகூறி இராமன் ஏற்பானோ மாட்டானோ எனற சந்தேகமும் பயமும் சிறிதும இன்றி நீஙகப பெற்றவனாய் வீரக் கழல அணிந்த இராமனின் திருவடிகளை தன் தலையிற் சூட்டிக்கொண்டான். அங்கு பரதன் எவ்வாறு திருவடிகளைச் சூடிக் கொண்டானோ அதுபோன்றே இவனும் இங்குச் சூடிக் கொண்டான்.

'' நடுவினிப் பகர்வ தென்னோ?
நாயக நபியினேனை
உடனுதித் தவர்க ளோடும் ஒருவ
னென்று உரையா நின்றாய்!
அடிமையிற் சிறந்தேன் என்னா
அயிர்ப பொடு அச்சம் நீங்கித்
தொடுகழற் செம்பொன் மௌலி
சென்னியிற் சூட்டிக்கொண்டான்''
(—கமப-வீடணன்-14)

எனவே வீடணன் பரதனை இராமனின் திருவடிகளைச சென்னியிற் சூட்டிக்கொண்டு அவன 'நுந்தை' என்று சொன்ன சொலலிறகு மிக ஏற்றம் தந்து அவனின் உணமையான தம்பிக்கும் ஒருபடி மேலாய் நடந்து கொள்கிறான். உண்மையான பாசத்துடன இராமன் தம்பியரை ஏறறுக் கொண்டு புதலவராய தயரதனைப் பொலிய வைக்கிறான். பல சிறப்புகட்கு மொத்த உருவமாய் இராமன் கூற்றான 'நுநதை' என்ற சொற்றொடர் அமைந்துள்ளது. இத்தகைய இராமனின அருங்குணச சிறப்பை எண்ணி எண்ணி வியவாதவர் இல்லை.

★

## அறிவிப்பு

ஸபுதகிரிக்கென்று ஒரு வருடம அல்லது அதறகு மேறபட்ட காலத்திற்கு அனுபபப்படும சநதாத தொகை மட்டுமே ஏற்றுககொளளப் படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப் படும் சந்தாத தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

# வியாக்யான சக்கரவர்த்தி

பாடல் பெற்ற பெருமையுடைய சிறப்புத்தலமும் சண்டேசுரர் அவதரித்த தலமுமான திருசசேய்ஞலூர் எனும சேங்கனூரில் கி. பி. 1227ல் சர்வ சித்து ஆணடு ஆவணி மாதம் கிருஷ்ண பக்ஷம் அஷ்டமியோடுகூடிய ரோகிணி நாளில் யாமுன தேசிகருக்கும் நாசசியார் அம்மாளுக்குமு ஆண் குழந்தை பிறந்தது. அன்று மேற்படி ஜயந்தி ஆனதால் அக குழந்தைககு கிருஷ்ண சூரி என்று பெயரிட்டார்கள். இளமை முதற்கொண்டே இலக்கண இலக்கியங்களிலும், வேத சாஸ்திரங்களிலும, சமய நூல்களிலும் அபரிவிதமான ஞானம் பெற்று விளங்கினுர். "விஷ்ணு பக்தியே சாரம்" என்று அறிந்து எப்போழ்தும் கண்ணபிரானையே பாடி அவன பெருமைகளைக் கூறிப் பக்தி பண்ணிக் கொண்டு இருந்தார். ஒரு சமயம் திருமலைக்குச் சென்று திருவேங்கடமுடையானைத் தரிசிக்க வேணடும் என எண்ணி பெற்றோர்களிடம் அனுமதி பெற்று தனது இல்லக்கிழத்தியை அழைத்துக் கொண்டு பாதயாத்திரையாகத் திருமலைககுச் சென்ருர். அங்கு பெருமாளைத் தரிசனம் செய்து கொண்டு அவரழகிலேயே ஈடுபட்டார். இதனுல் தனது உற்ருர், உறவினர்களை எல்லாம் மறந்து அங்கேயே சில காலம் தங்கி இருந்தார். இப்படி இருக்கையில் ஒரு நாள் திருவேங்கடமுடையான் மேற்படி வைஷ்ணவர் வடிவத்தோடு கிருஷ்ணசூரி முன் தோன்றி வந்து ஒரு சாளக்கிராமத்தைக் கொடுத்து "இதையே ஸ்ரீநிவாசனுக வைத்து வழிபடும்" என்றும், "உமது பிரிவால் பெற்ரோர்கள் துக்கப்படுவதால் உடனே உமது ஊருக்குச் செல்லும்" என்றும் கூறி மந்ரோபதேசமும் செய்வித்து மறைந்தார். பிறகு கிருஷ்ண சூரி சாளக்கிராமத்தை ஏந்திக் கொண்டு தனது மனைவியுடன் புறப்பட்டார் அங்ஙனம் வரும் போழ்து சேங்கனூர்க்கு வடக்கே மூன்று கல் தொலைவில் உள்ள வட காவேரி என்னும் கொள்ளிட நதியை அடைந்தார். நதிக்கரையில் தனது பொருள்களோடு சாளக்கிராமத்தையும் வைத்துவிட்டு நீராடித் தனது நித்திய கர்மானுஷ்டங்களைச் செய்தார். பிறகு அங்கிருந்து புறப்படும்போழ்து வைத்திருந்த சாளக்கிராமம் காணப்படவில்லை. இதனுல் மனம் வேதனை அடைந்துகொண்டு சேய்ஞலூருக்கு வந்தார். பெற்ருேர்களைக் கண்டு வணங்கி விபரங்களைக் கூறினுர். சாளக்கிராமம் இழந்த காரணத்தை எணணி துயர முற்ருர். ஒரு நாள் எல்லாம் வல்ல வேங்கடமுடையான். கிருஷ்ண சூரியன் கனவில் அபயப் பிரதான ரூபத்தில் தோன்றி 'பக்தா! உனது சாளக்கிராமத்திலிருந்து இதே ரூபம் எடுத்துக் கொணடு கொள்ளிட நதியால் இருக்கிறேம். துயரத்தை விட்டொழிந்து வந்து காணும்' என்று கூறித தான் இருக்கும் இடத்தையும் அடையாளங்காட்டி மறைந்தார். மறு நாள் கிராமத்து மக்களை அழைத்துக் கொணடு கிருஷ்ண சூரி கொள்ளிடத்துக்குச் சென்று, அடையாளம் காட்டிய இடத்தை அடைந்தார். மக்கள் மணலைத் தோண்டிப்பார்க்கும்போழ்து அவயப் பிரதான ஹஸ்தம் உடையராக மேற்படி நிவாசப் பெருமான் அர்ச்சனு ரூபியாய் இருக்கக கணடார்கள். கிருஷ்ண சூரி ஆனந்தப் பட்டு நிவாசப்பெருமானை சேய்ஞலூருக்கு எழுந்தருளப் பண்ணினுர். கீழ வீதியின் பால் திருக்கோயில் அமைத்துப் பிரதிஷ்டை செய்தார். முறைப்படி வழிபாடு செய்து வந்த காலையில் ஒரு நாள் கிருஷ்ண சூரி ரெங்கநாதப் பெருமானைத் தரிசிக்கச் சென்ருர். அங்கே தரிசன நிர்வாகியாய்ப் பெரும் புகழுடன் இருந்த நம்பிள்ளை, சூரியின் ஞானத்தை அறிந்து அவருக்குப் பெரிய வாச்சான்பிள்ளை என்று நாமம் சூட்டிச் சாஸ்திர ரகசியங்களை அனைத்தையும் உணர்த்தினுர். பிறகு ஒரு நாள் நம்பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளையைப் பார்த்துத் திருவாய் மொழிக்கு வியாக்யானம் செய்யும்படி ஆணையிட்டார். ஆசிரியப் பெருந்தகை ஆணைப்படி பெரிய வாச்சானபிள்ளை திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி என்னும் வியாக்யானம் செய்தார். இதன் சிறப்பால் பெரியவாச்சான் பிள்ளைக்கு வியாக்யான சக்கரவர்த்திகள் என்று பெயர் ஏற்பட்டது. பின்னர் பெரிய வாச்சான் பிள்ளை சேய்ஞலூருக்கு வந்து அனேக சீடர்களுக்குக் கல்விதானம செய்தார். அக்காலத்தில் இராமாயணத்துக்கு உரை எழுதினுர். இராமாயண தனி ஸ்லோகம் பாடினுர். மாணிக்க மாலை, நவரத்ன மாலை முதலிய நூல்களையும், கதயத்திரயம் முதலிய உரைகளையும் செய்தார். மகாமேதையான அப்பய்ய தீட்சதர் இவருடைய இராமாயண வியாக்யானத்தைப் படித்துப் பார்த்து "சோழியனுன பெரிய வாச்சான்பிள்ளை சுவைததுச் சக்கையான இராமாயணத்தில் இனி நான் உரை எழுத என்ன இருக்கிறது" என்று பாராட்டியிருக்கிருர். அனைவரிடமும் அன்பும் பாசமும் பிள்ளை காட்டி வந்தபடியால அவருக்குப் பரம காருண்யர் என்றும், அபயப் பிரதராஜர் என்றும் பெயர்கள் உண்டாயின. பிள்ளை 95 வயது வரை வாழ்ந்திருந்து சேங்கனூரில் ஸ்ரீநிவாசப் பெருமாள் திவ்ய திருவடியில் ஐயக்கியமானுர். அவருடைய சிலா ரூபம ஸ்ரீநிவாசப் பெருமான் திருவடியில் இன்னும உள்ளது. அவர் வாழ்ந்து வந்த வீடு திருமடமாக உள்ளது. ஸ்ரீரங்கத்திலும் பெரிய வாச்சானபிள்ளைக்குத் தனிச் சன்னதியும் மடமும் இன்றும் உள்ளது.

குத்தாலம் பாலச்சந்திரன்

# கல்வியைத் திருடிய கள்வன்

ஞுவளைக் கண்ணன் என்று ஒரு கந்தர்வன் இருந்தான் அவன் அறிவில் சிறந்தவன். ஆனால், மிகுநத இறுமாப்பு உடையவனாக இருந்தான.

பூவுலகத்தைச் சேர்ந்த அவனுடைய நண்பன் ஒருவன் உடல் நலிவு அடைந்து பெரிதும் துயருற்றான். அதைக் கண்ணுற்ற குவளைக் கண்ணன் ஆயுர்வேதம் பயில விரும்பினான்.

ஆக்காலத்தில் ஆயுர்வேத மருத்துவ முறையில் பிரம்ம மிததிரர் என பவர் நிகரற்ற பண்டிதராக விளங்கினார். குவளைக கணணன் அவரை அணுகினான்.

ஆனால், மாணவன குருவினிடம் காட்ட வேணடிய பணிவோ, ஆர்வமோ சிறிதுமின்றி, அவரைப் பார்த்து,

"முனிவரே, ஆயுாவேதம் கறறுக் கொள்ள விரும்புகிறேன். அதில் நீர் சிறந்தலர் எனறு கேள்விபபட்டேன். எனவே, அதை நீர் எனக்குக் கற்றுத்தர வேணடும். எனக்கு எதையுமே விரைவாகப புரிந்துகொள்ளும் ஆற்றல உணடு. ஆகவே, மிகக் குறுகிய காலத்தில் எனக்கு அதை நீர் சொல்லித தர வேணடும். மேலும், எனக்கு வேறு வேலைகளும் இருப்பதால் என்னால் பிற்பகல நேரத்தில் தான் வர முடியும்" எனறு ஆணையிடுவது போல் பேசினான்.

குவளைக் கண்ணனிடம் மிகுந்த அகந்தை குடி கொண்டிருப்பதைப் பிரம்மமித்திரர் கவனித்தார். அதனால், அவர் அவனுடைய வேண்டுகோளை ஏற்காது மறுத்துவிட்டார்.

எவ்வாறாயினும் அவ்வித்தையைக் கற்று, அம்முனிவருக்குத் தனது திறமையையும் பிடிவாதத்தையும் காட்ட வேண்டும் எனற எணணம் குவளைக் கண்ணனைப பற்றிக கொணடது.

ஆனால், பிரம்ம மித்திரரைப் போன்ற ஆசிரியர் அவனுக்கு அகப்படவில்லை. அவனுக்கு வேறு வழி எதுவும் புலப்படவில்லை. எனினும், அவரிடம மீணடும் சென்று மன்னிப்புக் கேட்பதற்கும் அவன மனம் இடம் கொடுக்கவில்லை.

ஆகையால், அவன் அவரை ஏமாற்றத தீர்மானித்தான்.

---

**'மீனம்'**

---

குவளைக் கணணனுக்கு, பிறர் கணணுக்குப் புலப்படாமல் இருக்கக்கூடிய ஒரு சிறப்பான ஆற்றல் இருந்தது. எனவே, அதைப் பயன்படுத்த நிச்சயித்தான்.

பிரம்ம மித்திரர் தமது மாணவர்களுக்குப் பாடம் சொல்லும்போது, எவர் கண்ணிற்கும் தெரியாமலிருந்து கொண்டு, குவளைக் கண்ணன் பாடங்களைக் கேட்டு வரலானான். இங்ஙனம் அவன் கல்வியைத் திருடும் ஒரு கள்வனானான்.

சிறிது காலம் சென்றது. பாடங்கள் முடிவடைந்தன. கல்விச் செருக்கு குவளைக் கண்ணனின் தலைக்கேறியது.

கர்வத்துடன் பிரம்ம மித்திரரிடமே சென்று,

"நீங்கள் மறுத்துவிட்டதனால் மட்டுமே நான் ஆயுர்வேத மருத்துவ முறையை அடைய முடியாது போய் விடவில்லை, தெரியுமா? அதை முழுவதும் இப்போது தெரிந்து கொண்டு விட்டேன். அதுவும் உங்களிடமே" என்று கூறி அவரை எள்ளி நகையாடினான்.



ஸ்ரீ ராஜகோபாலஸ்வாமி கோவில், ராஜமன்னார்குடி. திரு. சன்மிஷ்டை - தஞ்சை.



திருப்புன்கூர் சிவன் கோயில்.
திரு. வி. முத்துராமன - கோவை.

திருட்டுத்தனமாகக் குவலைக் கண்ணன் தம்மிடமே ஆயுர்வேத வைத்தியத்தைத் தெரிந்து கொண்டதை அறிந்த பிரம்ம மித்திரருக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று.

“பயங்கரமான ராட்சஸ உருவை நீ அடையக் கடவாய்'' என்று வெகுண்டு அவனைச் சபித்தார் பிரம்ம மித்திரர்.

தனது அழகிய உருவம் மாறி, கோரமாக ஆவதைக் கண்ட குவலைக் கண்ணன் நடுங்கிப் போய்விட்டான். தான் செய்த தவறு இந்நிலைக்குத் தன்னைக் கொணர்ந்து விடும் என்பதை அவன் முதலில் உணரவில்லை.

அச்சம் மேலிட்டு, அவன் முனிவரின் கால்களில் விழுந்து,

“மாபெரும் குற்றம் செய்துவிட்டேன். தங்களுடைய உயர்வு தெரியாது தங்களைப் பெரிதும அவமதித்து விட்டேன். பிழை பொறுத்து என்னை மன்னித்து சாப விமோசனம் ஏற்பட அருள்புரிய வேண்டும்'' என்று அவரைப் பலவாறாக வேண்டிப் பணிந்து நின்றான்.

பிரம்ம மித்திரரும் மனம் இரங்கி,

''உன் பெண்ணையே நீ பிடிப்பதற்கு முயற்சி செய்வாய். அவளைப் பின் தொடரும்போது வேற்றாள் ஒருவன் உன்மீது அம்பு எய்வான். அது உனது உடலில் பட்டவுடன், உனக்கு சாபத்திலிருந்து விடுதலை கிடைக்கும். பழைய உருவை மீண்டும் அடைவாய்'' என்று அருளினார்.

குவலைக கண்ணனும் ராட்சஸ உருவுடன் திரியலானான். அவனை எவரும் அடையாளம் கண்டு கொள்ளவில்லை.

ஒரு நாள் குவலைக் கண்ணனின் மகளான மனோரமா பொழுது போக்கிற்காகக் காட்டினுள் சென்றாள். அவளுடன் அவளுடைய தோழியரும் இருந்தனர்.

மகளைக் கண்ட குவலைக் கண்ணன் தனது பயங்கர உருவத்துடன், அவளிடம் பேசலாம் என்ற எண்ணத்துடன் அவளருகில் வந்தான். மனோரமாவிற்கோ தனது தந்தையை அடையாளம் தெரியவில்லை. மேலும், அவனுடைய பயங்கரமான உருவத்தைக் கண்டு அஞ்சி அவள் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடினாள். அவளுடைய தோழிகளும் பயத்துடன் கத்தினார்கள்.

குவலைக் கண்ணனோ அவர்களைப் பின் தொடர்ந்தான். தன் மகளிடம் தான அவளுடைய தந்தைதான் என்று சொல்லி அவளுடன் பேச விரும்பியது அவனுடைய தந்தை உள்ளம். ஆனால், மனோரமா மேலும் அச்சமுற்று இன்னும் வேகமாக ஓடினாள்.



மஹாபலிபுரம் கடற்கரைக் கோயிலில் அனந்தசயனம,
திருமதி. கமலா மாரியபபன் - கோவை

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
| --- | --- | --- |
| | டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | திருமணக் கூடம (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| | சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| | டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | |
| --- | --- |
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
| --- | --- |
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண: 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண்: 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பகக காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 15/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

அப்போது, வேட்டையாடுவதற்காக அங்கு வந்திருந்த சுவரோசி என்பவன் பெண்களின் துயரக் குரலைக் கேட்டு ஓடி வந்தான். பயஙகரமான ராட்சஸ உருவைக் கண்டு அவனும் முதலில் சிறிது அசசமடைநதான்.

தன்னையும் தோழியரையும் சாப பாற்றுவதற்காக அங்கு வந்த சுவரோசிக்கு மனோரமா தனக்குத் தெரிந்திருந்த 'அஸ்த்ர இருதயம்' என்னும் வித்தையைக் கற்றுக் கொடுத்து, அதைப் பயன்படுத்துமாறு அவனிடம் கூறினாள்.

அதன் துணைகொண்டு சுவரோசி அநதப் பயங்கரமான ராட்சஸ உருவின்மீது அம்பை எய்தான்.

அம்பு குவலைக் கண்ணனின் பயங்கரமான உருவுடைய உடலின்மீது பட்டவுடன் அவனுக்குச் சாப விமோசனம ஏற்பட்டது. அவன் பழைய கந்தர்வ உருவை மீண்டும் அடைந்தான்

தந்தையைக கண்ட மனோரமாவுககு வியப்பு ஏற்பட்டது. அவருக்கு ஏன் அத்தகைய பயங்கர உருவம் ஏற்பட்டது என்பதை அவரிடம் அவள கேட்டாள குவலைக கணணனும் நடநதவற்றைகக கூறித் தனது செயலுக்காக வெட்கமடைந்தான்.

தன் மகள் மனோரமாவை அவள் விரும்பிய வண்ணமே, தன்னைச சாபத்திலிருந்து மீட்ட சுவரோசிக்குத் திருமணம செய்து கொடுத்தான்.

தனது மகள், மருமகன் ஆகியோருடன் பிரம்ம மித்திரரிடம் சென்று அவரை வணங்கி,

"ஐயா, ஆசிரியர்களை அவமதிப்பதும கல்வியைக் களவாடுவதும் எத்தனை பெரிய பாவச் செயல்களாகும் என்பதை இப்போது உணாநது கொண்டேன. அபபப்பா, அதன் விளைவு எவ்வளவு பயங்கரமானதாயிருநதது? என்னை மன்னித்து, என் மகள மனோரமாவையும் எனக்குச் சாப விமோசனம அளித்த என மருமகன் சுவரோசியையும் ஆசீர்வதிக்குமாறு தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்" என்று குவலைக் கண்ணன் கூறினான்.

பிரம்ம மிததிரரும் குவலைக் கண்ணன் திருந்திவிட்டதை அறிந்து அவனை மன்னித்து அவனுக்கும் அவனுடைய மகளுக்கும் மருமகனுக்கும் ஆசி வழங்கினார். ★

# அதிசயம் ஆனல் உண்மை!

ஓங்கி வளர்ந்த மரங்கள் அடர்ந்த சோலைகள், செடிகள், புதர்கள் சூழ்ந்து மண்டிக்கிடக்கும் காட்டுப் புதூர் ஒரு கிராமம். அங்கே நாக ராஜன் என்ெருரு விவசாயி. கொஞ சம் பக்தி கொண்டவன். எந்த உயி ருக்கும் தீங்கு செய்யமாட்டான்.

அவனது நண்பன் ஒருவன், பாம்பு கடித்து இறந்து விட்டான் எனக் கேட்டு மிகவும வருந்தினன். வருத் தத்தின் முதிர்ச்சி கோபமாக மாறிய தும் அந்நாள் தொடங்கி எந்தப் பாம்பினை எங்கே கண்டாலும் அத னைக் கொன்று விடுவது வழக்கம். இவ்வாறே சில ஆண்டுகள் கழிந்தன.

ஒரு நாள், வயற்காட்டு வேலைக்கு தோப்பின் வழிச் செல்லலானன். புத ரினில் சலசலப்பு. பாம்பென அறிந் தான் நாகராஜன். கல்லினல் அடிக் கத் தொடங்கினன். 'வேண்டாம், வேண்டாம்' என்றது ஒரு குரல். திரும்பிப் பார்த்தான். பழுத்த ஞானி ஒருவர் வந்து கொண்டிருந் தார். 'எந்த உயிரையும் கொல் லாதே தம்பி. இனி எப்போதும் இப் படிச் செய்யாதே' என்ருர்.

'ஐயா, பாம்பு கடித்து துடித்து இறந்தனர் எத்தனை பேர்! அதனுலன் ரே பாம்பென்றல் படையும் நடுங் கும் என்கிருர்கள். அத்தகைய பாம் பினையல்லவா நான் அடிக்கத் தொடங்கினேன். இதில் தவறு என்ன பெரியவரே? தயவொடு தடுக் காதீர்கள்' என்ருன் நாகராஜன்.

'பாம்பின் பெருமை உனக்குத் தெரியுமா தம்பி? உலகினைத் தாங் கும் ஆதிசேஷன் பாம்புதானே! ஆதி சேஷன் அம்சமாக வந்தவன்தானே இலட்சுமணன். இராமாநுஜர் அந்த அம்சம்தான் தம்பி. அதுவும் தவிர பாம்பு சாதாரணமானதல்ல. 'சென் ருல் குடையாம், இருந்தால் சிங்கா தனமாம். நின்ருல மரவடியாம், நீள் கடலுள்-என்றும் புணையாம், மணிவிளக்காம், பூம்பட்டாம், புல் கும் அணையாம் திருமாற்கு அரவு' என்பது போலே எம்பெருமான் செல் லும்போது குடையாகவும் அமரும் போது சிங்காதனமாகவும், நிற்கும் போது பாதுகையாகவும் இருப்பதும் அரவு எனும் பாம்பு. பாற்கடலிலே ஓடம், ஒளி தரும் விளக்கு, பட்டுப் போன்ற ஆசனம், படுக்க நல்ல மெத்தை யாவதும் பாம்பேதான்.'

'சிவபெருமானின் ஆபரணமாவ தும், உமையவளின் விரலினில் மோதிரமாக இருப்பதும், விநாயக னின் யக்ஞோபவீதமும் பாம்பே யன்ருே? கந்தனின் வாகனமான மயி லின் காலின்கீழ் உள்ளது நாகம் தானே! கண்ணனின் நாட்டிய மேடை காளிங்கன் என்னும் பாம்பின் சிர மல்லவா! விலையுயர்ந்த மாணிக்கத் தைத் தருவதும் நாகமேயன்ருே! நல்ல பாம்பு என்றும் பெயர் பெற் றுள்ளதே! இத்தகு சிறப்புகள் வாய்ந்த பாம்பினைக் கொல்வது பாவ மல்லவா? தவறுதானே! இனி இப்படி ஒருபோதும் செய்யாதே' என்ருர் ஞானி. இவ்வாறு இருவரும் பேசிக் கொண்டிருக்கும் போதே புதரினில் பாம்பு தலையை நீட்ட, அதனை நாகரா ஜனின் கண்கள் கண்டதும், வழக்கம் போல் கை செயலபட குறி தவருது கல்லடிபட்ட பாம்பு துடிக்கத் துடிக்க மாண்டது.

பொங்கியது கோபம் ஞானிக்கு. 'துஷ்டா! சொல்லிக் கொண்டிருக் கும் போதே எனது கண் முன்னு லேயே தகாதன செய்தாய். நீயும் பாம்பாகப் பிறந்து துடிப்பாய்' என் ருர்.

காலில் விழுந்தான் நாகராஜன். 'பெரியவரே மனமறிந்து கொன்றே னில்லை. பழக்கதோஷம் தானகவே நேர்ந்து விட்டது. அநியாயமாக என்னை சபித்து விட்டீர்களே! மன் னிக்கமாட்டீர்களா' என வருந்தி னன்.

உண்மையென உணர்ந்த ஞானி, குழந்தாய் கோபத்தினுலும், உயிர், துடித்த கொடுமையினைக் கண்ட தாலும் சபித்துவிட்டேன். ஆனலும் ஒன்று. பாம்பாகப் பிறவி எடுப்பாய்.

---

ரகு-சென்னை-45

---

யாராலும் துன்பமின்றி பல்லாண்டு கள் வாழ்வாய் என வாழ்த்துகிறேன்' என்ருர்.

''மேலும் ஒரு வரம் தரவேண் டும்'' என்ருன் நாகராஜன்.

''கேளப்பா'' என்ருர் ஞானி.

'ஆதிசேஷனின் வம்சமாகப் பிறப் பதிலும், நன்கு வாழ்வதிலும் மகிழ்ச் சிதான். அந்திம காலத்தில் ஆண்ட வனின் சந்நிதியில் கருவறையின் முன் எனது பூத உடல் நிற்கவும், உயிர் அந்த ஆண்டவனின் திருவடிகளில் சேரவும் வரம் தரவேண்டும்' என்ருன் நாகராஜன்.

மகிழ்ந்தார் ஞானி. 'நல்ல வரமே கோரினய்: இறைவனின் திருவரு ளால் அவ்வாறே ஆகுக' என்ருர்.

பல ஆண்டுகளுக்குப் பின் நாக ராஜன் மாண்டான்.

1984-ம் ஆண்டு மே மாதம் 14-ம் நாள். மலைப்பாளயம் ஸ்ரீரங்கநாதர் சந்நிதியில் பூஜை முடித்து வெளியில் வந்த பட்டாச்சாரி, சிறிது நேரம் கழித்து உள்ளேசென்றவர் அதிர்ந்து

ஓடி வந்து வெளியில் நின்றார். காணம், நாம் படத்தில் காணும் பாம் அதே நிலையில் கருவறையின் முன் இருந்தது. அங்கே வெளியில் இருந்த சில அன்பர்கள் பாம்பினை அடிக்கத் தொடங்கியபோது பட்டாச்சாரி தடுத்து விட்டார். உயிரற்ற நிலையில் உடல மட்டும்தான் நிற்கிறது என்பதனை நெடுநேரம் கழித்து நெருங்கிக் கண்ட பின்னரே அறிந்தனர். மிகவும் அதிசயித்தனர்.



நரசிம்ம உபாசகரான மேற்படி பட்டாச்சாரி ஆவேச நிலையில் அருள் வாக்கினில் கூறியதைக் கேட்டவர்கள் கொடுத்த விவரம்தான் மேலே கூறியுள்ள நாகராஜனின் சரிதம். ஒரு சிலர் நாகத்தின் உடலைப் புதைக்க வேண்டும் என்றனர். ஒரு சிலர் தீயிலிட்டுப் பொசுக்கவேண்டும் என்றனர். ஆலயத்தில் அதன் உடல் இருக்கக் கூடாது என்றெல்லாம் பலர் கூறியும் பட்டாச்சாரியார் எதற்கும் இணங்கவில்லை. இந்த ஏழு மாதங்களாக இன்னும், இன்றும் கெடாமல் புகைப்படத்தில்



உள்ளவாறே இருக்கிறதென்றால் அது கலியுகத்தின் அதிசயம்தானே? பாம்பின் நீளம் ஆறரை அடி.

இந்த மகா அதிசயம் நிகழப்பெற்ற ஆலயம் ஔஷதகிரி மலைமீதுள்ள ரங்கநாதர் ஆலயமாகும். படத்தில் உள்ளவர்தான் மூலவர் ஸ்ரீரங்க நாதர். தென்னரங்கன் கொள்ளிடம் காவேரி எனும் இரண்டு ஆறுகளின் நடுவே பள்ளிகொண்டார். இவர் கல்லாறு, பாலாறு இரண்டுக்கும் நடுவே மலையின் உச்சியில் சயன திருக்கோலம் கொண்டார்.

திருவேங்கடமுடையான் போன்ற மிகச் சில சந்நிதிகள் தவிர, மலைமேல் பெருமாள் சந்நிதிகள் அபூர்வம். அதிலும் மலையின் மீதிலே பள்ளிகொண்ட சந்நிதிகள் மிகமிக அபூர்வம். ஏன் இல்லையென்றே கூட சொல்லாம், இந்த ஒரே ஒரு ஆலயத்தைத் தவிர. தென்திசை முடியை வைத்து, வடதிசை பாதம் நீட்டி, குடதிசை பின்பு காட்டி, குணதிசை நோக்கம் கொண்டு, கிடந்த திருக்கோலத்தில் திருவரங்கனின் தனிச் சந்நிதியை இங்குதான் காணமுடியும்.

சென்னை விழுப்புரம் ரயில் பாதையில் 'கருங்குழி' என்றொரு புகைவண்டி நிலயம். சென்னை திருச்சி நெடுஞ்சாலையில் சென்னையினின்றும் 76 கிலோ மீட்டர் தெற்கிலுள்ளது, 'கருங்குழி' என்னும் பேருந்து நிலயம். இங்கிருந்து நேர் மேற்கே இரண்டு கிலோ மீட்டர் தூரம் நடந்து சென்றால் மலைப்பாளயம் என்னும் கிராமத்தை அடைவோம். மலையைச் சார்ந்து உள்ளதனால் இப்பெயர் அமைந்தது போலும். இதே மலைதான் ஔஷதகிரி. இதன்மேல் இருப்பதுதான் அரங்கன் ஆலயம்.

மதுராந்தகம் ஒரு பேரூர். வகுளாரண்ய க்ஷேத்ரம். த்வயம் விளைந்த திருப்பதி. உடையவர் பெரிய நம்பிகளிடம் திருவடி சம்பந்தம் பெற்ற நற்பதி. விபாண்டக மகரிஷிக்குக் காட்சிதர, இலங்கையினின்றும் அயோத்திக்குச் செல்லுங்கால் புஷ்பக விமானத்திலிருந்து இறங்க பயந்த சீதாபிராட்டியின் கைகோர்த்தவாறே காட்சிதரும் கோதண்டராமர் நிலைபெற்ற க்ஷேத்ரம். ஆங்கில கலெக்டர் கர்னல் பிளேஸுக்கு வில்லம்புடன் காட்சி தந்தவர் ஏரி காத்த இராமர் எனும் இந்த கோதண்டராமர். இந்த மதுராந்தகத்து ஏரி மிகப் பெரியது, 18 கிராமங்களுக்குப் பாசன நீர் தருவது. இதன் கலங்கல் நீர்தான் 'கல்லாறு' எனப்படுவது.

இத்தகு பெருமைகள் வாய்ந்த மதுராந்தகத்து ஏரிக்கரையின் மீதே வடக்கு நோக்கி நடந்து வந்து அதன் கலங்கலையும் கடந்தபின் சிறிது தூரத்தில் மலைப்பாளயம் பயணிகள் தங்கும் விடுதி (*Traveller's Banga-low*) உள்ளது. அவ்வழியே சென்று கரடு முரடான சீரில்லாத படிகளைக் கண்டுபிடித்து சிரமப்பட்டு ஏறினால் இந்த ஆலயத்தை அடையலாம்.

ஔஷதங்கள் (மூலிகைகள்) கொண்டதாகக்கூறப்படுகின்ற நம்பப்படுகின்ற ஔஷதகிரி கொஞ்சம் உயரமான மலைதான். செங்குத்தாகவும் இரண்டொரு இடங்களில் ஏற வேண்டி இருக்கும். இதன் உச்சியில் சிறிய ஆலயம். ஸ்ரீராமபிரான் பூசித்து வந்த அரங்கன்தான் இவர்என வரலாறு கூறுகிறது. போக்குவரத்து வசதிகள் இல்லாத காரணத்தாலும் மலை ஏறுதல் கடினமாக இருப்பதாலும், மற்றைய வசதிகள் ஏதும் அங்கு இல்லாததாலும், பக்தர்கள் வருகை அளவினதாகவே உள்ளது. குன்றின்மேல் ஆலயமெனினும் குடத்திலுள்ள விளக்குபோல் இருக்கிறது.



ஸ்ரீ சென்ன கேசவபெருமாள் கோயில் - பேலூர்.
(நீளவாகிலும், பக்கவாட்டிலும் அடுக்குமுறையிலும் முழுவதும் கல்லினால் மட்டுமே இணைப்புகளுடன் கட்டப்பட்டது.
திரு: எஸ். ஜி. சேஷகிரி - கோவை)

1940க்கு முன் மிகச் சாதாரண நிலையில் இருந்தது. பின்னர் தேவ ராஜ சுவாமிகள் ஸ்ரீவில்லி புத்தூரினின்றும் ஏகாங்கியாக எழுந்தருளியவர் ஆலய கைங்கரியம் செய்து விளக்கமளித்தார். சிறிது பிரசித்தம் அடைந்தது. அவரது மறைவுக்குப் பின் 1960 முதல் எப்படியோ இருந்தது 1979ம் ஆண்டு மார்கழி மாதம் முதல் சனிக்கிழமை ஓர் அடியார் கனவின்படி சென்னை நுங்கம்பாக்கம் 'ஸ்ரீநிவாச நிகேதனம்' திரு. சீதாராம்தாஸ் சுவாமிகள் அவர்கள் தலைமையில் படிவிழா நடத்தப்பட்டது. பஜனை பாடிக் கொண்டு படியேறி வழிபாடு நடைபெறுகிறது. இது ஒவ்வோராண்டும் நடைபெறுகிறது.

மூன்று ஆண்டுகளாக இங்கே திருவாராதனம் செய்யும் பட்டாச்சாரியார் நரசிம்ம உபாசகர். மிகவும சிரத்தையுடன பாடுபட்டு வருகிறார். இவரது பாதுகாப்பில்தான இந்த பாமபின உடல் இருக்கின்றது. இந்த ஆலயத்தின எதிரே, பலி பீடத்தின பின்னால் ஒரு பள்ளம், பெரிய பெரிய கருங்கற்களால் நிரப்பப்பட்டுள்ளது. அந்தககற்களின் இடுக்கில்பல்லாண்டுகளாக வாழ்ந்து வந்தது ஒரு நாகம். சிலர் எப்போதாவது பால் ஊற்றுவார்கள். சிலரது கண்களில் படடதும உணடு. யாரையும் ஒனறும் செய்ததில்லை. அதற்கும யாரும் தீங்கு செய்ததில்லை.

இதே நல்ல பாம்புதான் நாகராஜன். இதன் உடல்தான் ஏழு மாதங்களாக படத்தில் உள்ளபடி இன்னும் பின்னமாகாமல், கெடாமல் இருக்கின்றது. இது பெரிய அதிசயமல்லவா? ஆனாலும் உண்மையன்றோ?

# கர்ணனும் கும்பகர்ணனும்

மகாபாரதம், இராமாயணம் இவையிரண்டும் நம் நாட்டின் பழமையான இதிகாசங்கள். கம்பராமாயணத்தைப் பற்றி அறியாதார் யாருமிலர். தமிழ்நாட்டின் பெருமையே கம்பராமாயணத்தின் கண் அடங்கும். மகாபாரதம் முதலில் வியாசராலும் பின்பு தமிழில் வில்லிபுத்தூராராலும் எழுதப்பட்டது.

மகாபாரதத்தின் முக்கிய பாத்திரங்களுள் கர்ணனும் ஒருவன். பாண்டவர் ஐவருக்கும் மூத்தவன் ஆயினும் விதியினால் கௌரவர்கள் பக்கம் கொண்டு செல்லப்பட்டவன். வீரத்தில் ஈடு இணையற்றவன். கண்ணனுக்கே கொடையளித்த கொடையாளி. அத்தகையோன் தான் உண்மையிலேயே பாண்டவர்பாற்பட்டவன் என்பதை அறிந்தும் இறுதி வரை கௌரவர்க்காகப் போரிட்டு மாண்டான்.

கும்பகர்ணன் இராமாயணத்தின் முக்கிய பாத்திரம். இராவணனின் தம்பி. விபீடணனின் அண்ணன். வீரத்தில் மிக்கோன். தூக்கத்தில் தக்கோன். இராவணனின் செயல் அநீதியானதென்று தெரிந்தும் அவனுக்காகவே போரிட்டு உயிர்த் துறந்தான்.

கர்ணனும் கும்பகர்ணனும் வீரத்திற் சிறந்தவர்கள். கும்பகர்ணனைப் பற்றிக் கம்பர் "குன்றென உயர்ந்த தோளான்" "திண்திறல் வீரன்" என்றெல்லாம் குறிப்பிடுகிறார்.

மேலும் "இணையாழி மணிநெடுந் தேர் படைபேரா வரும்போதும் பதையாத உடம்பானை" என்றும் "கதிரவாள் வயிரப்பணைக் கையினன்" என்றும் "குன்றன தோள் கையான்" என்றும் குறிப்பிட்டு கும்பகர்ணனைச் சித்திரிக்கிறார்.

போர்க்களத்தில் இராமன் கும்பகர்ணனைப் பார்த்து "பூணுளார் மார்பினனணியாவன் போலுமால்" என்று எண்ணுகிறான்.

வீடணன் அவனை "காரியல் காலன்ன கழற் கும்பகருணன்" என்றுகூறுகிறான்.

கர்ணனைப் பற்றிக் கூறுங்கால் வில்லிபுத்தூரார் "வண்மையில் உயர்ந்த வீரன்" என்று குறிப்பிடுகிறார் கண்ணன் "வண்மையினால் உயர் அங்கர் குலாதிப" என்றே விளிக்கிறான். விடுமன் கர்ணனை "மன்னர்க்கு ஏறு அன்னான்" என்பான். இவ்வாறே கர்ணனும் கும்பகர்ணனும் வீரத்திற் சிறந்தோர் என்பது புலனும்.

கண்ணன் பாண்டவர் பக்கம் வந்து விடு என்று கர்ணனை அழைக்கிறான். அதற்கு கர்ணன்,

"இனறுல எனது பிறப்பு
உணர்ந்தேன என்று அன்பு
உருகி எம்பியர் பால்
சென்றல் என்னை நீ அறியச்
செகத்தார் என்றும் சிரியாரோ"

என்று கேட்டு விட்டு மேலும்,

"ஆர்என்று அறியத்தகாத எனை
அரசும் ஆக்கி முடிசூட்டி
சீரும் திறமும தனது பெருந்திருவும்
எனக்கே தெரிந்தளித்தான்
பார் இன்று அறிய நூற்றுவர்க்கும்
பழிதீர் வெற்றிப் பாண்டவர்க்கும்
போர் என்றறிந்தும் செய்ந்நன்றி
போற்றுதவரின் போவேனே?

திரு. பி. பெரியசாமி எம்.ஏ., பி.ஈ.டி.,
திருச்சி.

என்று செய்ந்நன்றியைக் குறிப்பிடுகிறான். பின்பு குந்தி வந்து பாண்டவர்க்கு மூத்தோன் என்பதை நிருவி அழைக்கிறாள். அதற்கு,



பார்த்தசாரதி கோயில் தெப்போற்சவம் - சென்னை.
திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

''பெற்றநீர் அன்பு இலாமையோ
அன்றிப் பெரும்பழி நாணியோ
விடுத்தீர்;
அற்றைநாள் தொடங்கி என்னை
இன்றளவும் ஆர்உயிர் துணை
எனக்கருதி
கொற்றமாமகுடம் புனைந்தரசு
அளித்து கூடஉண்டு உரிய
தம்பியரும்
சுற்றம ஆனவரும் என்அடி வணங்க
தோறறமும் ஏற்றமும்
அளித்தான்''

என்று அவன் பெற்ற ஏற்றத்தைக குறிப்பிடுவதோடு,

''மடந்தை பொன்திருமேகலை மணி
உகவே
மாசு அறத்திகழும் ஏகாந்த
இடநதனில் புரிந்தே நான அயர்ந்து
இருப்ப
''எடுக்கவோ? கோக்கவோ''
எனறுன்
திடமபடுத்திடுவேல் இராச ராசனுக்குச்
செருமுனைச் சென்றுசெஞ்சோற்றுக்
கடன் கழிப்பதுவே எனக்கினிப் புகழும்
கருமமும் தருமமும் என்றுன்''

என்று தனது செஞ்சோற்றுக் கடன் கழிக்க வேண்டிய கருமத்தை குறிப்பிடுகிறுன. அஃதோடு உடம்பில் உயிருள்ள வரை துரியனுககாகவே போரிட்டு மாய்கிறுன்.

இஃதே போன்று கும்பகர்ணனும் இராவணன் செயல் நீதியன்று என்று தெரிந்தும நன்றிக் கடனுக காகவே போர் செய்ய வந்தான்.

இராவணன் 'போர்க்களம் புகுவாய்' என்று வேண்டியபோது ''தையலை விட்டு அவன் சரணத்து தாழ்ந்து நின்'' என்று வாதிடுகிறுன். ஆயினும் இராவணன் ''வெறுவிதுன் வீரம்'' என்று அவன் வீரத்தை இகழ்கிறுன். கும்பகர்ணனும் வேறு வழியின்றிப் போர்க்களம் புகுந்து போர் செய்தான். தன் உடம்பின்கண் உயிருள்ள வரை இராவணனுக்காகவே போர் செய்கிறுன். இராமன் போர்க்களத்தில் கும்பகர்ணனைப் 'போய்வா' எனப் புகன்றபோது

''போர்க் கோலம் செய்து விட்டாற்குயிர்
கொடாதங்குப போகேன்''

என்று பகர்கிறுன். பின்பு

''பொருதொழிற்குரியராகி ஒருத்தரின்
முன்னஞ்
சாதலுண்டவர்க்குரியதம்மா''

என்று சொல்வதோடு ''துணையின்றிச் சேரல் நன்றே தோற்றுற கூற்றின் சூழல்'' என்று இராவணனுக்கு வேண்டிய துணையையும் குறிப்பிடுகிறுன். இவற்றுல் கும்பகர்ணனின் செய்ந்நன்றி மறவாச் செம்மை வெளிப்படும்.

கர்ணன், கும்பகர்ணன் இருவருமே சிறந்த வீரர்கள். செய்ந்நனறி மறவாச் சீலர்கள். கர்ணன் சிறந்த கொடையாளி. ''சந்தப் பனுவல் இசைமாலை தாஞகரனை விரைந்து எய்தி அளிப்பாய்'' என்றுல் அவன் ஒன்றும் இப்புவியில் மறுத்து அறியான் உயிரே எனினும் ஈந்திடுவான் என்று அவன் கொடைத் திறத்தை வியக்கிறுன் கண்ணன்.

இந்திரன் கவச குண்டலங்களை யாசித்த போது அவற்றை ஈந்தான். பின்பு குந்தி வந்து கேட்ட போது அவளுக்கும் வரங்களை மகிழ்ந்தளித்தான. போர்க்களத்தில் தருமங்களால் உயிர் போகா நின்ற காலை கண்ணன் வந்து அவனது தருமத்தின் பயன்கள் யாவையும் யாசிக்க ''எத் தலங்களினும் ஈகையால் ஓகை வகையால் எதிர் இலா வீரன்'' கர்ணன,

''ஆவியோ நிலையின் கலங்கியது யாக்கை
அகத்ததோ புறத்ததோ அறியேன்
பாவியேன் வேண்டும பொருள் எலாம்
நயக்கும் பக்குவம தன்னில்
வந்திலையால்
ஒவு இலாது யான்செய்த புண்ணியம்
உதவினேன் கொள்க உனக்குப்
பூவில் வாழ் அயனும் நிகர் இலான்
என்றுல் புண்ணியம் இதனினும்
பெரிதோ?

என்று மகிழ்ந்து தன் குருதியையே நீராக வார்த்து தன் புண்ணியங்களைத் தானம் செய்தான். என்னே அவனது கொடைத்திறம்!

கும்பகர்ணன் தூக்கத்தில் சிறந்தவன். குதிரை முதலியவைகளை அனுப்பியும் அவன் தூக்கத்தைக் கலைக்க முடியவில்லை. சங்கு முதலியன முழக்கியும், சூலத்தால் மழுவாட் கொண்டெறிந்தும் அவனை எழுப்பு தற்கியலவில்லை. இத்தகு தூக்க முடையோன் மானம் மிக்கவன். அவன் போர்க்களத்தில் இராமனை நோக்கி,

'' மூக்கிலா முகமென்று முனிவர்களும
மரர்களும்
நோக்குவார் நோக்காமை நுண் கணை
யாலென் கழுத்தை
நீக்குவாய் நீக்கிய பினெடுந்தலையைக்
கருங்கடலுள்
போக்குவாயிது நின்னை வேண்டுகின்ற
பொருளென்றுன்

அவனது மூக்கிலா முகங் கண்டு பலரும் இகழ்வார்களே என்று மானத் திற்கஞ்சி இவ்வேண்டுகோளை விடுக்கிறுன.

இதுகாறும நோககியவற்றினின்றும் கர்ணன், குமபகர்ணன் ஆகிய இருபெரும் இணையற்ற வீரர்தம் சிறப்பியல்புகள் புலனுகின்றன.



# ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் அற்புத லீலைகள்

ஸ்ரீ சிவானந்த யோகி என்பவர் தன்னுடைய "அப்பய்ய தீக்ஷிதேந்திர விஜயம்" என்ற புததகத்தில், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் நிகழ்த்திய அற்புத லீலைகளைத் தொகுத்து, விளக்கியிருக்கிறார். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் சாக்ஷாத் சிவ பெருமானின் அவதாரம் என்பது உலகப் பிரசித்தி. மேலும், 'கங்கா வதாரணம்" என்ற ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரின் புத்தகத்திலிருந்து, ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் அவதார மகிமை புலப்படுகிறது.

**1. நிக்ரஹாஷ்டகம் :**

ஒரு முறை ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் தனது சிஷ்யர்களுடன் ஒரு பல்லக்கில் ஏறி, வேலூர் வழியாகப் போய்க் கொண்டிருந்தார். ஸ்ரீதாதா சார்யர் என்கிற ஒருவர் இவரைக் கொல்ல வேண்டுமென்று சில அடியாட்களை நியமித்திருந்தார். இதனை ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் சிஷ்யர்கள் கண்டுபிடித்து, இவர்களது சூழ்ச்சியைப் பற்றி ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரிடம் கூறினார்கள். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் பகவானிடம் தனது "நிக்ரஹாஷ்டகம்" மூலம் தோத்திரம் செய்து, பிரார்த்தித்து, பல்லக்கினை நிறுத்தாமல் செலுத்துமாறு கேட்டுக் கொண்டார். பலலக்கும நிறுத்தப் படாமல், வழிநெடுக சிவபெருமானின் நாம கோஷம் ஒலிக்க போய்க கொணடிருந்தது. அப்பய்ய தீக்ஷிதரும் தனது நிக்ரஹாஷ்டகத்தை நிறுத்தாமல் மேன்மேலும் தொடர்ந்து சுலோகங்களை அடுக்கிக் கொண்டே போனார். இதற்கிடையில், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரைக் கொல்ல வேணடும் என்று நின்ற அடியாட்கள் அனைவரும் கற்சிலை போல் செயலற்றுப் போனார்கள். அவர்கள் தங்களது உணர்வுகள் அனைத்தையும் இழந்தவராய், சுண்டு விரலைக்கூட அசைக்க முடியாமல் தவித்தனர். மேலும் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் தன் சிஷ்யர்களுடன் படகேறி அககரைக்குச் சென்று தன் ஆசிரமத்திற்கு ஒரு தீங்கும் நேராமல் சுகமாக வந்து சேர்ந்தார். பிறகே, ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் தன் "நிக்ரஹாஷ்டகத்தை" முடித்தனர் இதனை முடித்தவுடனே, ஸ்ரீதாதா சாரியர் தன்னை மின்னல் தீண்டியது போல் உணர்ந்து மூர்ச்சையாகி கீழே விழ்ந்தார். பிறகு ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் இதுகேட்டு அவருக்கு முதலுதவி செய்ய அவர் வீடு விரைந்தார் என்று வரலாறு கூறுகிறது.

**2. சமாதி நிலை :**

மற்றொரு வரலாறு அவரைப்பற்றி கூறப்படுகிறது. ஒரு முறை, ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர் அவர்கள் தனது பூஜாக் கிரஹத்தில், ஆழ்ந்த தவக்கோலம் பூண்டிருந்தார். அவரது மனைவியார் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் சமாதி நிலையை(the ultimate of meditation) காண எணணி, அவரது தரிசனம் நாடி வநதார். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரும், "பெணணே! அதனைக் காணச் சகிக்க முடியாது" என்று கூறினார். ஆனால் அவரது மனையாளோ மீணடும் மீணடும் வறபுறுத்தினார். கடைசியாக, ஒரு கட்டளையின் பேரில் தன் சமாதி நிலையைக் காட்டுவதாக ஒப்புக் கொண்டார். அதன்படி, அவர் தனது மனையாளை, அந்த அறையின கதவின் துவாரத்தின் வழியாக மட்டுமே அதனைக் காணவேண்டும் என்று கட்டளையிட்டார். அதன்படி அவரது மனைவியாரும் ஒப்புக்கொண்டார்.

---

திரு. ஏ. என். மாதவன், B.SC., A.C.A.

சென்னை-20.

---

தவககோலம் பூண்ட ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் சமாதி நிலையைச் சிறிது நேரத்தில் அடைந்தார். அவர் அங்ஙனம் சமாதி நிலையில் இருக்கும் தருணம் அவர் நெருப்புப் பிழம்பு போல் ஜொலிக்கலானார்; அவரது உடலை பாம்புகள் சுற்றி வளைத்தன. இதனைக் கண்ட அவரது மனைவியார் மூர்ச்சையாகி கீழே விழுந்தார். பிறகு, இதனால் அவர் கண் பார்வையை இழக்க நேர்ந்தது என்று வரலாறு கூறுகிறது.

**3. வாஜபேய யாகம் :**

ஸ்ரீ சிவானந்த யோகியின் "அப்பய்ய தீக்ஷிதேந்திர விஜயம்" என்ற புத்தகம் மற்றும் பலப்பல அரிய நிகழ்ச்சிகளை எடுத்தியம்புகிறது: ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் 'வாஜபேய யாகத்தை' நடத்த முற்பட்டார். இதற்காக யாக சாலைக்குக் கொண்டு வரப்பட்ட பலி ஆடுகளைக் கண்டு கலக்கமுற்றார் ஏனெனில், அவைகளை பலியிட வேண்டுமே என்பது தான் அவருக்கு வருத்தம் கொடுத்த விஷயம். ஆனால் அதுதான் வழக்கம் என்று அருகிலிருந்தோர் அழுத்தமாகக் கூற வேறு வழியில்லாமல் ஒப்புக் கொண்டார். மேலும், வேத நியதிகளும் இப்படியே வழங்குகிறது என்று கேட்டு, அவர் 'வேதம் இப்படியொரு தீய செயலை ஏன் கூறவேண்டும்' என்று யோசிக்கலானார். ஆனால் அருகிலிருந்த 'ரித்விக்குகள்' அவரைத் தேற்ற நினைத்தனர். ஆனால் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் கடவுளைப் பிரார்த்திக்கலானார்:

या ब्रह्मणो निश्वसितं यदुक्तिः सत्यानिशं
यज्जपतो विमुक्तिः
सैव प्रमाणं ननु मादृशानां श्रुते नमस्ते
भवती गतिर्नः॥
विहितं विपरीतमेकतः स्यात् तदपि स्यात्कु-
हचिच्च साधकं

गहना गतिमस्य कर्मणोऽपि श्रुतिभावं च न
विद्महे महेश ॥

"வேத ஸ்ருதி என்பது தருமத்தின் மூச்சுக் காற்று; அதன் வாசகம் அனுதியானது; அதனைச் சாடுவதால் மட்டுமே மோக்ஷம் சித்திக்கும்; அவ்வகைச் ஸ்ருதியே, என்னைப் போன்றவர்களுக்கு ஆதாரமும், அபரிமிதமான நிருபணமும் ஆகும். சுருதியே எங்கள் அடைக்கலன். பகவான் மட்டுமே அதன் ரகசியத்தையும் உண்மையையும் அறிவன்; ஆகவே, நம் வகையில் அவை ஒரு புறம் கடுமையாகவும், மறுபுறம் அப்பழுக்கற்றதாகவும் இருக்கிறது. நமது கடமை சுருதியைக் கடைப்பிடிப்பதே! யாகசாலையில் வெட்டுண்ட ஆடுகள் இறப்பைக் கடந்து விடலாம்; ஏனெனில், அவைகளின் ஆத்மா அழிவற்றது. ஆகவே நாம் அழிப்பதும் இல்லை; அவை அழிவதும் இல்லை" என்று பாடி முடித்தார்.

இதனைப் பாடி முடித்தவுடனேயே வெட்டுண்ட ஆடுகள் மீண்டும் உயிர் பெற்றன என்று வரலாறு கூறுகிறது.

## 4. சிவ பூஜை

ஸ்ரீ கே. வி. சுப்பிரமணிய சாஸ்திரி என்பவர் ஸ்ரீ சிவானந்த யோகியவர்கள் விட்ட சில அரிய நிகழ்ச்சிகளைத் தொகுத்து தனது "ஸ்ரீ அப்பய்ய தீக்ஷித விஜயம்" என்ற புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார். எனினும், ஸ்ரீ சிவானந்த யோகியின் புத்தகத்தைத் தான் திரு. சாஸ்திரி அவர்கள் ஆதாரமாகக் கொண்டுள்ளார்.

ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் சிவபூஜையில் எப்போதும் ஈடுபட்டிருப்பது வழக்கம். ஒரு முறை, அவர் சிஷ்யர்களில் இளமையான ஒருவருக்குச் சிறிய சந்தேகம் ஒன்று எழுந்தது. எப்படி சிவபெருமானை வழிபடுவது? ஒருவர் அசுத்தியுடன் இருக்கும் போது அவரை வழிபடலாகுமா? 'சுத்தம்' என்பது உடல், மனம் இவை இரண்டிலும் இருக்க வேண்டியது அவசியம் அல்லவா? என்று வினவலானார். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் தூய்மையைப் பற்றி விளக்கலானார். "எவன் ஒருவன் தனது உடலையும் (உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை) மனத்தையும் தூய்மையாக வைத்திருக்கிறானோ, அவனே சிவபெருமானை வழிபடத் தகுந்தவன். ஆனால், சாதாரண மக்கள் தனது மனதை மட்டும் தூய்மையாக வைத்திருந்து சிவபெருமானை வழிபட்டால் போதுமானது; உடல் சுத்தம் தேவையில்லை" என்று குறிப்பிட்டார். மேலும் அவர் விவரிக்கலானார்.

"பாண்டிய ராஜா ஒருவன் சிவபெருமானைப் பிரம்பால் அடித்தனனே; ஒரு வேடுவன் மாமிசத்தை உணவாகப் படைத்தான்; கண்ணப்பர் தனது காலால் உதைத்தான்; அவற்றையெல்லாம சிவபெருமான பக்தியாகக் கொள்ளவில்லையா? சிவபெருமான் வெளி வேஷங்களைக் கண்டு சட்டை செய்வதில்லை; அவரை அடைய மனத்தின்கண் தூய அன்பையும் பக்தியையும் பெற்றிருத்தலே முறையான வழியாகும்" என்று அறிவுரை கூறுகிறார்.

எனவே, கடவுளை வழிபட, புறத் தூய்மையை விட. அகத்தூய்மையே ஆதாரம் என்பது புலனாகிறது. எனினும், 'பாதத்தையும், கைகளையும், மனத்தையும் கழுவிக் கொண்டு பிரார்த்தனை செய்' என்றும் அறிவுறுத்துகிறார்.

இப்படிப்பட்ட அற்புத நிகழ்ச்சிகள் பிற்காலத்தில் வந்தவர்களால் வேண்டுமென்றே எழுதப்பட்டது என்ற ஒரு அபிப்பிராயம் பெரும்பாலான பண்டிதர்களிடையே இருந்து வருகிறது. மேலும் இவை 'பெரிய மகான்கள் எதையும் சாதிக்க வல்லவர்கள்' என்று எடுத்தியம்பவே ஏற்படுத்தப்பட்டன என்ற பரவலான அபிப்பிராயமும் உண்டு. எனவே பக்தர்கள் இக் கதைகளை அப்படியே விட்டு விடுவது நல்லது என்றும், இதனை மிகவும் ஆழமாக பார்ப்பது நல்லதல்ல என்றும் அவற்றின் தத்துவ உண்மைகளை மட்டுமே அறிந்தின்புற வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

★



சீர்காழி சிவன் கோயில். திரு வி முத்துராமன் - கோவை.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களில் ஸ்ரீராமன் அறத்தையும் இராவணன் மற்றிரண்டையும் தங்கள் லட்சியமாகக் கொண்டார்கள். இராவணன் பதவியாலே பெயர் பெற்றான். இராமனோ தமது தமது, தவம், உறுதி, கொள்கை, ஒழுக்கம் என்பவைகளால் அழியாத புகழ் பெற்றான். இராமாயணம் ஒருவகையில் உலக நீதியையும் கதைப் போக்கில் மின்னல் ஒளிபோல் இடை இடையேகாட்டும். தந்தை, மகன் — கணவன், மனைவி — தமையன், தம்பி — நண்பன், பகைவன் — குரு, சிஷ்யன், அரசன், குடிகள் போன்றவர்களின் சீரிய உறவின் பணைப்பற்றி விளக்கியும், தூய அன்பின் நலனாலும், தன்னலத் துறவின் நலனாலும் எவ்வாறு உறவுகள் விழுமியனவாகின்றன என்ற தத்துவத்தையும் வெளிப்படுத்தும். இராமாயணத்தைப் பகவத்கீதையில் காணப்படும் ஓர் ஒப்பற்ற வேதாந்தத்தின் பிறப்பிடம் எனலாம். கருமத்தில் சிறந்த ஜனகரையும், ஞானத்தில் சிறந்த வசிஷ்டரையும், பக்தியில் சிறந்த விபீஷணன் முதலானவர்களையும் பற்றி இராமனது அவதார கார்யத்தில் ஒற்றுமைப்படுத்திக் காட்டும் நிலையில் இது பகவத்கீதைக்கு வழிகாட்டி போல அமைந்திருக்கிறது எனலாம். பற்றற்ற நிலையில் தன் கடமையைச் செய்ய வேண்டும் என்பதற்குப் பரதன் சரித்திரம எடுத்துக்காட்டாகும். முதன் முதலில் தேவர்களின் சரணாகதியிலிருந்து தொடங்கிக் கடைசியில் விபீஷணன் சரணாகதி வரை சரணாகதியின் பல்வேறு நிலைகளால ஏற்படும் பல்வேறு பலன்கள் காட்டப்படுகின்றன. இந்த இராமாயணத்தின் பேரொளியாக விளங்குவது சீதையின தியாகமும், கற்பும் தான். அதனால்தான் இதறகுச் சிறை இருந்தவள் ஏற்றம் கூறும் நூல் எனப்படுகிறது. "ஸீதாயா: சரிதம் மகத்" எனவும, "தோமறுமாக்கதை" எனவும் இதனைப்புகழவார்கள். இராவணன் அழிவுககுக் காரணம் சீதையின் கற்பாகிய நெருப்பே என்பர். பழைய பாரதப பணபிற்கும் மதககொள்கைக்கும இன்றைய நாகரீக அமைப்பிற்கும் அழியாத ஒரு பாலமபோல் விளங்குவது இராமாயணம். பிரமனால் விருமபி அனுப்பப்பட்ட நாரதரின் உபதேசத்தால் வாலமீகி என்ற மகிரிஷியின் மூலம் வெளி வந்த இந்த இராமாயணமாகிய கங்கை ஓர் அருள் நூலாகவும் கருதப்படும். இதில் வரும் எந்த விஷயமும் பொய்யல்ல எல்லாம் மெய்யே எனப்பிரமனே கூறியுள்ளார். மலை, கடல், ஆறுகள் இவ்வுலகில் உள்ளவரை இந்த இராமாயணத்தை அழிக்கமுடியாது என்பது பிரமன் வாக்கு. இதன் முக்கிய ரஸம், "கருணை" என்பதாகும். இந்த இராமாயணம் முதலில் பிரமனது சத்திய உலகில் 100 கோடி செய்யுள் உடையதாக இருந்ததாம். இதன் வழி நூலாகத் தமிழில் கம்பராமாயணமும் ஹிந்தியில் ராம சரிதமானஸம் என்ற மானஸ ராமாயணமுமாகும். 2000 வருஷங்களுக்கு முன்பு எழுந்த இந்த இராமாயணம் ஒரு மனிதன் தனது நன்னடத்தையால் தெய்வத் தன்மை பெற்று அழியாப்புகழை அடையலாம் என்ற கருத்தை விளக்கும். 500 சர்க்கங்களும், 7 காண்டங்களும், 24 ஆயிரம் செய்யுள்களும் கொண்ட நூலாகுமிது. 7 காண்டங்களையும் 7 நதிகளுக்கும், 7 மாதாக்களுக்கும், 7 கடல்களுக்கும் ஒப்பிடுவர். "த" என்ற எழுத்தில் தொடங்கி ஒவ்வொரு ஆயிரம் செய்யுட்களின் முதல் எழுத்தைச் சேர்த்தால் கடைசியில் காயத்ரியின் உரு எனவும் கூறுவார்கள். இந்த இராமாயணம் கிறிஸ்துவுக்கு முன் முதல் நூற்றாண்டில் தோன்றி இருக்கும் எனவும், இதில் சொல்லப்படும் ரிஷிகளும், இராசிச்சக்கரமும் அந்தக்காலம் தொட்டே வழங்கி வருகின்றன எனவும் ஆராய்ச்சியாளர்களின் கருத்து. உடல் வலிமையால் இரக்கமின்றி மதம் கொண்டு மக்களைத் துன்புறுத்தும் தீய குணங்களை அரக்கர்பாலும், நிலையற்ற உள்ளத்தன்மையை குரங்குகளிடத்திலும், இருக்கவேண்டிய அனைத்துப் பண்புகளையும் இராமனுடத்திலும் காட்டி, இக்குணங்களின் ஒப்பு உயர்வுகளை வெளிப்படுத்துகிறது இராமாயணம். இநநூல் உவமைக்குப் பிறப்பிடம். இயற்கை வருணனை தற்கால ரீதிக்கும் ஒத்திருக்கும்படி இருக்கும். எதையும் மிகைபடக்கூறாமல் சித்தரிப்பது. எளிய சொற்களாலும் சுருக்கமான வாககியததாலும் கருத்தாழத்துடன் நடைபயலும் நூல். இதற்கு கோவிந்தராஜர், மகேசுவர தீர்ததர். நாகோஜிபட்டர் வரதராஜர். கநதாடை இராமாநுஜர், கதகயோகீந்திரர், திரியம்பகராயமநு எனபவர்கள் உரை எழுதி உள்ளார்கள். இராமாயணங்கள் வால்மீகி ராமாயணத்தொடக்கமாக சேஷராமாயணம முடிவாக 6 இராமாயணங்கள் சம்ஸ்கிருத மொழியில் உள்ளவை. இவைகளைப் போல் பௌத்த ஜைன இராமாயணங்களும் உண்டு. பௌத்த சமயத்தில் தசரத ஜாதகம் என்ற நூல் கவனிககத்தக்கது. இலங்காவ

தாரம் என்ற பௌத்த மதநூலில் இராவணன் புத்தரைச் சந்தித்ததாக ஒரு நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது. பிராகிருதம், கன்னடம், தமிழ், மலையாளம் முதலிய மொழிகளிலும் சிறப்பான இராமாயண நூல்கள் உண்டு. துளசிதாசர், குசிபட்டாரகன், நநதி முனிவரன், கவிபரமேஷ்டி, எழுத்தச்சன், கம்பன் முதலானவர்கள் மிகவும் அருமையாக இந்நூலைக்கொணடு வழிநூல்களான இராமாயணங்கள் எழுதியுள்ளார்கள். ஜைனமதத்தின் ஆதி தீர்த்தங்கரான புருதேவர் என்பவர் தம் மகனுகிய பரத சக்கரவர்த்திக்கு இராமாயணக் கதையைக் கூறினுர் என ஜைன நூல்களில் சொல்லப்படுகிறது. விமலசூரி எழுதிய பரமசரிதம் என்ற ஜைன இராமாயணம் மிகவும பழைமையானது. ஹிந்தியில் துளசிதாஸ் எழுதிய இராமாயணமும் மலையாளத்தில் துஞ்சத்து எழுத்தச்சன் எழுதிய மலையாள இராமாயணமும் அந்த அந்த மொழிக்கு ஒரு அணிகலனுகவே இருக்கின்றன. வால்மீகியில் சுந்தர காண்டம், துளசியில் ஆரணயகாண்டமும், கம்பனில் அயோத்தியாகாண்டமும், எழுத்தச்சனில் பாலகாண்டமும் சிறப்பாக இருக்கும் என்பர். வால்மீகி இராமனை ஒரு மனிதனுகவே சித்தரிக்கிறுர். மற்றவர்கள் அவரைத் தெய்வப் பிறவியாக உரைக்கிறுர்கள். மற்றும் வால்மீகி இராமாயணத்தை ஒரு அருள் நூலாகக்கொண்டு விருப்பம் நிறைவேறவும் நவக்கிரகங்களின் பிரீதிக்காக குறிப்பிடப்பட்ட ஒவ்வொரு சர்க்கத்தையும பாராயணம் பண்ணுகிறுர்கள். இராமனைப் போல் இராமாயணத்துக்கும் தனிச்சிறப்புண்டு எனவும கூறுகிறுர்கள். இராமன் நம்மை விட்டுச் சென்றுலும் அவன்கதை கூறும் இராமாயணம் இன்றும் நம்முடன் இருந்து அருள்பாலிக்கிறது என ஆசார்யர்களின் திருவுள்ளமாகும். இராமனே அசுவமேத மகா மண்டபத்தில் இராமாயணக் கதையைக் கேட்டுவிட்டு 'எனககும், எவருக்கும் எல்லா நலங்களேயும் கூட்டி வைக்கும் இந்த இராமாயணத்தை எல்லோரும் படியுங்கள், பாராயணம் செய்யுங்கள். கதையைக் கேளுங்கள்' எனப் புகழ்ந்ததாக வால்மீகியே கூறுகிறுர். கம்பன் இதை ஆரணக் கவிதை எனவும், அருணுசலக் கவிராயர் இலக்கிய வேதம் எனவும் கூறினுர்கள்.

(தொடரும்)

---

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

: 8 :

அதன்பின்பு சிறியாண்டான் திருவேங்கடமுடையானது பெருவள்ளல் தன்மையைக் கண்டு மகிழ்ந்து, 'அனந்தாழ்வானே, திருவேங்கடமுடையான் தனது தன்மையை மறந்து எனது தன்மையைப் பார்த்தானாகில் பழைய நரகங்கள் போதாமல், எனக்குத் தருவதற்காகப் பல புதிய பெரிய நரகங்களை ஸ்ருஷ்டிக்க வேண்டியேயிருக்கும். அநாதியான எனது ஜந்ம பரம்பரைகளில் நான் செய்த பாப பரம்பரைகள் கணக்கில் அடங்காவாகையால் சுதந்திரனான அப்பெருமான் அப்பாவங்களை ஆராய்ந்தால் எனக்குத் தண்டனை கொடுப்பது அவனுக்குத் தவிர்க்க முடியாதல்லவா? எனது தன்மையைப் பாராமல் தனது தன்மையைப் பார்த்தானாகில், பெருவள்ளலான அவனுக்கு இப்போதுள்ள பழைய பரமபதம் போதாமல் எனக்குத் தருவதற்காகப் புதிய பல பரமபதங்கள் படைக்க வேண்டியே யிருக்கும். 'அலம்புரிந்த நெடுந்தடக்கை' (திருநெடு-6) என்று கலியனருளிச் செயலினால் நீண்ட பெருங்கைகளையுடைமை (=பெருவள்ளல் தன்மை) அப்பெருமானிடம் அறியப்பட்டதல்லவா? அப்படியன்றாகில் தேவரீருடைய ப்ரார்த்தனை முடிவு பெறுவதற்குள் 'ஸோऽத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம்' (கடோபநிஷத்து 1-3-9) என்கிறபடியே-ஜீவாத்மா திரியும் ஜநந மரண பரம்பரையாகிய ஸம்ஸாரத்தின் மார்க்கத்திற்கு எல்லைக் கரையாகிய-யார்க்கும் கிடைக்கவரிய பரமபதத்தை எனக்கு அவன் தந்தருளியது எங்ஙனம் பொருந்தும்' என்று விண்ணப்பித்து விட்டு அப்போதே பரமபதம் சேர்ந்தார்.

அதன் பிறகு அனந்தாழ்வானும் மிகவும் ஆச்சரிய மடைந்தவராய் 'ப்ரஹ்மத்தை உள்ளபடி அறிந்த தமப்பனாருடைய இறுதிக் காலத்தில் மகன் வைஷ்ணவர்களைக் கொண்டு அவருக்கு ஸ்ரீ சூர்ண ஸம்ஸ்காரம் செய்விக்க வேண்டும். மஹாத்மாக்களான ஆசார்யருடைய மரண காலத்தில் அவர்களுடைய திருமேனியை மந்த்ரத்தினால் பரிசுத்தமாக்கப்பட்ட ஸ்ரீ சூர்ணத்தினால் அலங்கரிக்க வேண்டும். புருஷ ஸூக்தத்தினால் திருமஞ்சனமும் ப்ரமமேத ஸம்ஸ்காரமும் செய்விக்க வேண்டும். இவற்றைக் காலதாமதமின்றிப் பெரியோர்கள் மரணமடைந்தவுடனேயே ஆசரிக்க வேண்டும்' என்றுள்ள ஸ்ரீ ஸம்ஹிதை வசனத்தின்படியும், 'குறமற்ற அந்தணர்கள் நன்மை தருவதாய் அர்ச்சிராதி மார்க்கமென்று கூறப்படும் மோக்ஷ வழியிலே ஜீவாத்மா செல்லுவதைப் பற்றிச் சிந்தனை செய்வதைக் கூறுகின்ற அத்தியாயத்தையும், மற்ற முனிவர்களும் மனிதர்களும் இயற்றிய பகவானைப் பற்றிய துதிகளையும் பித்ருக்களுடைய மரண விழாவில் படிக்கக் கடவர்கள். அழகிய பந்தலிட்டு அங்கு உரலில் சுத்தமான மஞ்சளைச் சேர்த்து, பெருமானுடைய தாஸிகளைக் கொண்டு உலக்கையினால் இடித்துப் பொடி செய்வித்தது அறிவுள்ள மகன் அதை மந்திரங்களால் பரிசுத்தமாக்கக் கடவன்' என்றுள்ள வேறு ஸம்ஹிதையைச் சேர்ந்த வசனத்தின்படியும், ஸ்ரீ பாஞ்சராத்ர உத்தரகண்டத்திலுள்ள தாய், சௌனகருக்கும் பிரம தேவனுக்கும் ஸம்வாத ரூபமான முப்பத்தோராவது அத்தியாயத்தில் 'பூஜிக்கத்தக்க பிரமதேவரே, ப்ரஹ்மமேதிகளின் (ப்ரஹ்மஜ்ஞானமுள்ளவர்களின்) ஸம்ஸ்காரத்தைக் (உயிர் பிரிந்த உடலுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடனைக்) கேட்க விரும்புகிறேன். அது வைஷ்ணவர்களுக்கு எப்படி விதிக்கப்பட்டுள்ளதோ அப்படி எனக்குச் சொல்லுவீராக' என்று

திரு தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான, திருப்பதி.

தொடங்கி வினவிய சௌனகருக்கு, 'இப்படிப்பட்ட ப்ரஹ்மமேதிகளின் ஸம்ஸ்காரத்தை எந்த வைஷ்ணவர்கள் (தம் தமப்பன்மார்களுக்கும் ஆசார்யர்களுக்கும் மற்றுள்ள பெரியோர்களுக்கும்) இவ்வுலகில் செய்கிறார்களோ அவர்களெல்லோரும் பாவங்கள் தொலையப் பெற்றுப் பரமபதத்தை அடைகிறார்கள்' என்பதாகப் பிரமதேவன் சொல்லியபடியும் அச்சிறியாண்டானுக்குச் சிறிதும் தாமதமின்றி ஸ்ரீ சூர்ண பரிபாலனம் செய்து ப்ரஹ்மரதத்தில் அவரை எழுந்தருளப் பண்ணிப் பிரமமேத ஸம்ஸ்காரம் தொடக்கமான சரம கைங்கரியங்களைத் தாமே மிகவும் ஆதரத்தோடு செய்து முடித்தார்: இங்ஙனமே வளர்த்தான் மங்கலமுடைய ஸ்ரீ வைஷ்ணவருக்கும் புலிக்

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

கும் அனந்தாழ்வான் மோக்ஷம் அளிப்பித்த வரலாறு முதலியனவும் நினைக்கத் தக்கன.

இவ்வாறு பகவத் ராமானுஜ முனிவருடைய இடைவிடாத மிகவுயர்ந்த கருணைக் கடைக்கண்ணோக்கத்திற்கு இலக்கானவரும் அதுவே காரணமாகத் திருவேங்கடநாதனது கரையில்லாத கருணையாகிய கடலில் நீர் மனிதர் போல் நிரந்தரமாக உறைபவருமான அனந்தாழ்வானுடைய, மிகவும் வியப்பைத் தருமவையாய்த் திருவேங்கடமுடையானது கடாக்ஷ விசேஷத்தினுல் விளங்கச் செய்யப் பட்ட பிற சரித்திரங்கள் பிற நூல்களின் வாயிலாக அறியத்தக்கன.

அனந்தாழ்வானுடைய குணம் வைபவம் இவற்றைப் பற்றிப் பெரியோர்கள் சில ச்லோகங்களை அவரைச் சேர்ந்தவர்களால் அனுஸந்திக்கத்தக்கவையாக இயற்றினுர்கள். அவற்றின் பொருளாவது:

1. வேத வாக்குக்களுக்கும எட்டாத பெருமையுடையவனுய்த் திருவேங்கடமலையாகிய திவ்ய தேசத்தில் உறையும் எம்பெருமான் பின தொடர்ந்து ஓடி வந்து எவருக்குத் தன் மாலையை அணிவித்தானே அப்படிப்பட்ட உயர்ந்த அனந்தாழவானை ஸேவிக்கிறேன். 2. யதிராஜரான ராமானுஜருடைய திருவடித்தாமரைகளில் வண்டு போன்றவரும் அருளாளப் பெருமாளெம் பெருமானுரின் தயைக்கு முக்கிய கொள்கலமானவரும் திருவெங்கடமுடையானது திருவடியிணையில் பேரன்பு பூண்டவருமான அனந்தாழ்வானை இடைவிடாமல் பலமுறை வணங்குகிறேன். 3. தமது மனைவியின் உதவி கொண்டு பெரிய ஏரியொன்றை வெட்டும் போது பிரமசாரி வேஷமணிந்த திருவேங்கடமுடையான் வந்து மண்பாரம் சுமக்கப் பெற்ற பெருமை பெற்றவரும் அப்பெருமான் சாத்திக் களைந்து தந்தருளிய அழகிய நறுமணமுள்ள மாலையினுல் மணங்கமழும் திருக்கழுத்தையுடையவருமான அனந்தாழ்வானைத் தஞ்சமடைகிறேன். 4. தமது தோட்டத்தில் அப்போதலர்ந்து வாசனையை அள்ளி வீசுகின்ற மலர்களாலே, வேறு பயனை விரும்பாமல் தொண்டு செய்து திருவேங்கடமுடையானை ஸந்தோஷிக்கச் செய்யும் அனந்தாழ்வான் (அடியேன் தியானம் செய்யுமாறு மனதில்) எப்போதும் தோன்றுக-என்பதேயாகும்.

இவ்வனந்தாழ்வான் பகவத்ராமானுஜருடைய திருப்பாதக் கமலங்களில் பக்தி மிக்க மனம் படைத்தவராய், அவர் புறச்சமயிகளை வாதத்தில் வென்று விஜய யாத்திரை செய்த போது படிக்கத்தக்க விருதுகளைக் கூறும் ஐந்து ச்லோகங்கள் கொண்ட நூலையும், அவருக்கு மங்களங்களை உண்டாக்குமதாய் நித்யம் அனுஸந்திக்கத்தக்க பத்து ச்லோகங்களைக் கொண்ட நூலையும், நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியை ஓதுவதற்கு முன்பு, தனியனுக ஓதத்தக்க மந்த்ரமான (ஏய்ந்த பெருங்கீர்த்தி என்று தொடங்கும்) ஒரு தமிழ்ச் செய்யுளையும் இயற்றினுர்.

இவருடைய திருக்குமாரர் இராமானுஜரென்ற பேர் பெறறவர் இவரைபபோல் தொண்டு செய்வதில் ஈடுபாடு கொண்டவராய்த் தமப்பனுரால திருவேங்கடவன் கோவிலுக்குத் தென மேற்குத் திசையில் நிருமிககப் பட்டு அவருடைய ஆசார்யராகிய ஸ்ரீராமாநுஜரின் திருநாமம் சூட்டப் பெற்ற தோட்டம் ஏரி முதலியவற்றைக் கண்டு, தாமும் அதற்கு வடகிழக்குத் திசையில் தம்மாசார்யரான அனந்தாழ்வான் பெயரால் தோட்டம் ஏரி முதலியவற்றை நிருமித்துத் தமப்பனுரோடு கூடவே தினந்தோறும் பலவகைத் தொணடுகளைப் புரிந்து கொணடு திருவேங்கடமுடையானை மிகவும் மகிழ்வித்துக் கொணடிருந்தார்.

இப்படி அனந்தாழ்வான பலவகையான பகவத் கைங்கர்யங்களைச் செய்து கொணடும் பலவிதமான வைஷ்ணவாசாரங்களை மேன்மேலும வளர்த்துக் கொண்டும வாழ்ந்திருந்தார்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸ மாலையில் ஆறும் கொத்து முற்றும்.

(தொடரும்)

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணேற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக்காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுபப வேண்டிய தொகையை டி. டி. (D. D.) மூலம் அனுப்பினுல் மேலாண்மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

16-ம பக்கத் தொடர்ச்சி)

தொகை நூல்களில் இராமகாதை பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**கலித்தொகை:**

'கற்றறிந்தார் ஏத்தும் கலி' என்று போற்றப்படும் இத்தொகுப்பில் ஐந்து நிலங்களைப் பற்றிய பாடல்கள் உள்ளன. குறிஞ்சி பற்றிப் பாடுவதில் வல்லவரான கபிலா பாடிய குறிஞ்சிக் கலிப்பாடல் ஒன்று.

" இமையவில வாங்கிய ஈர்ச்சடை
அந்தணன்
உமையமர்ந்து உயர்மலை இருநதனன்
ஆக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிபபொலி தடக்கையிற் கீழ்ப்
புகுந்து அமமலை
எடுக்கல் செல்லாது உழப்பவன
போல"

மலைப்புலதது வாழும் மதங் கொண்ட வேழம் ஒன்று மலர் நிறைந்த வேங்கை மரத்தைப் புலி என எண்ணி, அதனைப் பலமாகத் தாக்கியது. மரத்தில் சிக்கிக் கொண்ட தனது தந்தங்களை இழுக்க முடியாமல் யானை ஓலமிட்டது. தசமுகனான இராவணன் ஆணவத்தால் கயிலை மலையைத தூக்க முயன்ற போது, சிவபெருமானின் செயலால் அவனது கரங்கள் மலையிடுக்கில் சிக்கிக் கொண்டன. இப்பாடலில் வேழத்தின் செயலுக்கு உதாரணமாக இராவணனின் செய்கை எடுத்துக காட்டப்பட்டுள்ளது.

**அகநானூறு:**

அகநானூற்றில் 'களிற்றியானை நிரை' என்ற பகுதியில அமைந்த ஏழாம பாடல் கடுவன்மள்ளனார் என்ற புலவா இயற்றியது.

" வெளவேற கவுரியா தொலமுதுகோடி
முழஙகு இரும பௌவம இரங்கும்
முன்துறை
வெலபோா இராமன அருமறைக்கு
அவித்த
பலவீழ் ஆலம போல
ஒலிஅவிந் தன்று, இவ் அழுங்கல்
ஊரே"

சேதுபந்தனம் அமைக்கு முன்னர், இராமபிரான், கடற்கரையிலுள்ள ஆலமரத்தடியில், வானர வீரர்களுடன் போா பற்றிய ஆலோசனையில் ஈடுபட்டிருந்தார். அப்போது மாலைப் பொழுதானதால், பறவைகள் எழுப்பிய ஒலி அவர்களுக்கு இடைஞ்சலாக இருந்தது. இராமபிரான் பறவைகளை நோக்கி கைகளால் சைகை புரிந்தவுடன அப்பறவைகள் ஒலி செய்வதை நிறுத்திக் கொண்டன; இந்நிகழ்ச்சிக்கு ஒப்பாக வேறு ஒரு நிகழ்ச்சி குறிப்பிடப்படுகிறது.

தலைவனும் தலைவியும் களவியலில் ஈடுபடுவது கண்டு ஊரார் பழிச் சொற்களும் மறைந்து போயின.

**புறநானூறு:**

வரலாற்றுச் செய்திகளை மிகுதியாக வழங்கும் புறநானூற்றிலுள்ள ஊன் பொதி பசுங்குடையாரின் பாடல் இராமாயணச் செய்தி ஒன்றை அளிக்கிறது. புலவரின் பாடலினால் மகிழ்வுற்ற சோழன் 'செருப்பாழி யெறிந்த இளஞ்சேட் சென்னி' அப் புலவருக்கு ஏராளமான ஆபரணங்களை வழங்கினான். அத்தகைய அணிகலன்களை இதுவரை அறிந்திராத புலவர், விரலில் அணிவதைச் செவியிலும், கழுத்தில் அணிய வேண்டியதை இடுப்பிலும், இடுப்பில் அணிய வேண்டியதைக் கழுத்தில் மாறி மாறி அணிநது அவைவரின் நகைப்புக்கும்

*Statement about ownership and other particulars about*

## SAPTHAGIRI
## (MONTHLY)

FORM IV

( *See Rule* 8)

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | Monthly |
| 3 | Honorary Editor | Sri S Laksminarayana, I.A.S<br>Executive Officer, T.T.D |
| 4 | Printer's Name<br>Whether citizen of India<br>Address | Sri M. Vijayakumar Reddy, L.P.T.,<br>Yes<br>Manager, T.T.D. Printing Press, Tirupati |
| 5 | Editor & Publisher's Name<br>Whether citizen of India<br>Address | K. Subba Rao, M.A.,<br>Yes<br>Editor, Sapthagiri,<br>T.T D. Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T. D, Tirupati. |

*I, K Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
*Date*: 28-2-1985.

(*Sd.*) K. SUBBA RAO,
*Signature of the Publisher.*

ஆளாயினா. இதற்கு ஒப்பாக ஒரு இராமாயண நிகழ்ச்சி குறிப்பிடப் படுகிறது. இராவணனால் கவர்ந்து செல்லப்பட்ட சீதை தனது அணி கலன்களை வீசியெறிகிறார். அவற்றை எடுத்த வானர வீரர்களும் அணி களை மாறி மாறி அணிந்து கொண் டனர்.

கடுந்தேர் இராமன உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வவலிய ஞானறை
நிலஞ்சேர் மதர்அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தா அங்கு
அருஅ அருநகை இனிது பெற்றிகுமே.

**பரிபாடல்:**

அகமும் புறமும் கலந்த இத் தொகுதியில் திருமால், செவ்வேள் ஆகியோர் பற்றிய பாடல்கள் உள் ளன. செவ்வேள் பற்றிய பாடல் ஒன்றில் திருப்பரங்குன்றம் கோயி லுள்ள 'எழுத்து நிலை மண்டபத்தில்' அகலிகை வரலாறு ஓவிய வடிவில் தீட்டப்பட்டிருந்ததாகக் குறிப்பு உள்ளது; ஆலயத்திற்கு வரும் பக்தர் கள் அனைவரும் அந்த ஓவியத்தை வியப்புடன் கண்டனர்.

' இந்திரன் பூசை இவள் அகலிகை இவன்
சென்ற கவுதமன சின்னுறக் கலலுரு
ஒன்றிய படியிதென்று' உரை செய வோரும்
(பரிபாடல்-செவ்வேள்-19-(50-52))

**சங்கம் மருவிய காலம்-**
**இரட்டைக் காப்பியங்கள்:**

சங்க காலத்திற்குப் பின்னர் தோன்றிய இரட்டைக் காப்பியங் களான சிலப்பதிகாரமும் மணிமேகலை யும் சமண, பௌத்த சமயச் சார் புடையன. ஆயினும் அக்காப்பியங் களில் இராமாயணம் பற்றிய செய்திகள் உள்ளன.

**சிலப்பதிகாரம்:**

கோவலனைப் பிரிந்த மாதவி தனது உள்ளத் துயரைத் தெரிவிக்கு மாறு கௌசிகன் எனும் மறை யோனை அனுப்புகிறாள். கோவலனை மதுரைக்குச் செல்லும் வழியில் சந் தித்த கௌசிகனும், மாதவியின் நிலையைக் கூறுகிறான்; அப்போது கோவலனைப் பிரிந்த புகார் நகர், இராமனைப் பிரிந்த அயோத்தி மாநகர் போலக் களை இழந்திருப்ப தாகச் செப்புகிறான்.

பெருமகன ஏவல அல்லது யாங்கனும்
'அரசே தஞ்சம' என்று அருங் கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும் பெயர்மூதூர் பெருமபேது உற்றதும்
(மதுரைக் காண்டம்-புறஞ்சேரி இறுத்த காதை 63-66)

மதுரையை அடைந்த கோவலன் தனக்கு ஏற்பட்ட நிலையை எண்ணி வருந்தியபோது அவனுக்கு ஆறுதல் மொழிகளைக் கவுந்தியடிகள் கூறினார். வேத முதல்வனை நான்முகனை ஈன்ற திருமாலின் அவதாரமான இராமன் நாட்டைத் துறந்து கானகம் சென்று அல்லல் உற்ற நிகழ்ச்சியை அப் போது கவுந்தியடிகள் குறிப்பிட் டார்.

தானத ஏவலின் மாதுடன போகிக்
காதலி நீங்கக் கடுத்துயர் உழந்தோன
வேத முதலவற பயந்தோன என்பது
அறிநதிலையோ? நெடு மொழி அன்றோ!
(மதுரைக் காண்டம்-ஊர்காண காதை (46-49))

தமிழரின் ஆற்றலை இகழ்ந்த "வட திசை மருங்கின் மன்னர் தம் முடித் தலையில கடவுளெழுதவோர்" கல் லைக் கொணரச் சென்ற செங்குட்டு வன் கடுமையான போரில் வடபுல வேந்தரை வென்றான். தேவாசுர யுத்தம் 18 ஆண்டுகளும், இராவண இராம யுத்தம் 18 திங்களும், மகா பாரதப் போர் 18 நாளும், சேரன் செங்குட்டுவன் நடத்திய வட புலப் போர் 18 நாழிகையும் நடை பெற்றன என்று அப்பகுதி குறிப்பிடு கிறது.

" உயிர்த்தொகை உணட ஒன்பதிற்று இரட்டியென்று
யாண்டும மதியும, நாளும கடிகையும்
ஈண்டுநீர் ஞாலம் கூட்டி எண்கொள"
(வஞ்சிக் காண்டம்-நீர்படைக் காதை (8-10))

**மணிமேகலை:**

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மணிமேகலையின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் இக்காப்பியம் சீத்தலை சாத்தனாரால் இயற்றப்பட் டது. பௌத்த மதக் கருத்துக்களைப் பரப்ப எழுந்த இந்நூலிலும் இராம காதை பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

புத்தர் அவதரித்த வைகாசிப் பூர் ணிமை தினத்தன்று மணி பல்லவம் எனும் தீவில் அள்ள அள்ளக் குறை யாமல் உணவை வழங்கும் அமுத சுரபி எனும் கலத்தை மணிமேகலை பெற்று, ஏழைகளுக்கு உணவு வழங் கும் பசிப்பிணி மருத்துவச்சியாக விளங்கினாள். ஒரு முனிவரின் சாபத் தால் 'யானைப் பசி' எனும் தீராப் பசிப்பிணியை உடைய காய சண டிகை மணிமேகலையிடம் உணவுப் பசி நீங்கப் பெற்றாள். மலையளவு உணவு உண்டபோதும் தீராத தனது யானைப் பசியை, வானரர் கட்டிய சேதுபந்தனத்திற்கு ஒப்பாகக் காய சண்டிகை குறிப்பிடுகிறாள். வானரர் கடலில் எறிந்த மலைகளெல்லாம் நீரினுள் மறைந்தது போல மலை யளவு உணவும் வயிற்றில் சென்று மறைந்ததாகக் காயசண்டிகை கூறி னாள்.

நெடியோன் மயஙகி நிலமிசைத் தோனறி
அடலரு முநநீர் அடைந்த ஞானறு
குரங்கு கொணர்ந் தெறிந்த நெடு மலை எல்லாம
அணஙகுடை அளக்கர் வயிறு புக்காஙகு
இட்டது ஆற்றுக் கட்டழற் கடும்பசிப்
பட்டேன் எனறன் பழவினைப பயத்தால் (17, 7-14)

பத்து அளவைகள்பற்றி வேறு இடத்தில் விளக்கும்போது இராமன் வெற்றி, இராவணன் தோல்வி பற் றிய செய்திகள் மணிமேகலையில் குறிப்பிடப்படுகின்றன.



# இராமன் என் உயிர்

தமிழகத்தில் ஒரு கவிதைக் கடல் உள்ளதென்றால், அது கம்பன் இயற்றிய இராமாயணமேயாகும். கம்பன் கவிதைக் கடலை நீந்திக் கரை கண்டாரில்லை. மூழ்கி ஆழம் கண்டாருமில்லை. மூழ்கிக் கண்டெடுத்த முத்துக்கள் கொஞ்சமா? அம்முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட தமிழன்னையை இலக்கிய உலகமே பார்த்து ரசிக்கிறது; கம்பன் கவிதைத் தென்றல் வீசாத இடமில்லை; பேசாத நாவில்லை; கேளாத செவியில்லை.

இங்கிலாந்தில் ஒரு ஷேக்ஸ்பியர் ஆங்கிலேயர் உள்ளத்தில் ஆழமாகக் குடிகொண்டது போல் தமிழ்நாட்டின் ஷேக்ஸ்பியர், கம்பன் என்றால் அதுமிகையாகாது.

உப்பில்லா உணவு ருசி இருக்காது. அதுபோல் கம்பன் கவிதை இல்லா எழுத்தும் பேச்சும் இனிக்காது. இராம காவியத்திலுள்ள, ஒவ்வொரு கதாபாத்திரங்களின் உள்ளத்திலும கம்பன் புகுந்து அப்பாத்திரங்களாகவே மாறி விடுகின்றான். இதைக் கவனித்தால் கம்பன் ஒரு மனோதத்துவ புலவனுமாவான் என்பதை அறியலாம்.

கம்பன் காவியத்தில தசரதனுடைய துயரங்களையெல்லாம் கொண்டு வந்து நிறுததுகின்றான். தசரதன் அனலிலிட்ட மெழுகு போல் உருகுகின்றான் என்பதைக் கம்பன் சொற்சித்திரம் நம் கண்முன் நிற்கிறது. இங்குக் கம்பன் காவியப் புலவன் மாத்திரமின்றி ஓவியப் புலவனாகவும் மாறி விடுகின்றான்.

இந்த சிறிய அறிமுகம் கம்பன் படைப்பைஎடுத்துக்காட்டுவதில், கடலிலுள்ள சிறு துளி போன்றதாகும்.

தசரதனுடைய மிகப் பெரிய துயரம் தன் தவப்புதல்வன் ஸ்ரீஇராமனை விட்டுப் பிரிந்திருப்பதேயாகும். இதைக் கம்பன் உள்ளத்திலிருந்து வருவதைப் பார்ப்போம்.

''இராமன் என் உயிர். இராமனின்றேல் என்னுயிர் பிரிந்து விடும்'' என்ற உணர்வுதசரதன் உள்ளத்தில் உறைந்துக் கிடக்கிறது. அதை சமயம் வரும்போது வெளிக்காட்டுகிறான். இராமனுக்கு ஏதாவது தீங்கு வந்தால் தசரதன் தனக்கு வந்ததாகவே நினைக்கின்றான். அப்பொழுது தசரதன் உள்ளம் கலங்குகிறது. உடல் வாடுகிறது. துயரம சூழ்ந்து கொள்ளுகிறது.

தசரதன் தவத்தால் பெற்ற நான்கு மக்களில் இராமனிடத்தில் அதிக அன்பு வைத்திருந்தான். அந்த அன்பு உயிர் போன்றது. இது வெறும் உபசார வார்த்தையல்ல. ''தசரதன் என்ற உடலில் இராமன் என்ற உயிர் குடி இருந்தது. இராமன் என்ற உயிர் பிரிந்தால் தசரதன் உடல் பிணமாகி விடும்'' என்ற அளவில் பிணைக்கப்பட்டிருந்தது. இதைக் கம்பன் தன் கவிதைப் பூங்காவில் களி நடனம் புரிய வைக்கின்றான். சாதாரணமாக உலக வழக்கில் நோய்வாய்ப் பட்டிறநதாலும் அல்லது திடீரென விபத்தினால் ஒருவர் மாண்டாலும் மனங்கலங்கி அழுவார்கள். ஆனால் இம்மாதிரி விபத்து தசரதனுக்கு ஏற்படவில்லை. தசரதனுக்கு ஏற்பட்ட விபத்தெல்லாம் ஒரு வார்த்தையால் வந்த மரணம் எனக் கூறலாம்.

திரு. ஆர். அத்தியப்பன்—பாச்சல்.

''என்னுடைய வேள்வியைக் காக்க இராமனை மட்டும் எனக்குத் துணையாக அனுப்ப வேண்டும்'' என விசுவாமித்திரர் கேட்கிறார். இந்த வார்த்தையை தசரதன் தன் காதால் கேட்டதும் ''உன் உயிரைக் கொடு'' என எமன் கேட்டமாதிரி இருநததாம். ''உன்னுடைய உயிரைக் கொணடு போகவே நான் வந்திருக்கிறேன். கொடு'' என நேரிடையாகக்கேட்காமல் மறைமுகமாக விசுவாமித்திரர் கேட்பதாகத் தசரதன் நினைக்கின்றான்.

தசரதன் இராமனைத் தன் உயிர் என நினைக்கின்றான். இராமனைக் கொடு என்றால், தன்னுயிரைக் கொடு என்பதுதானே அர்த்தம். இதைக் கம்பர்பிரான் தன் செஞ்சொற்களால் மிக அழகாக சித்தரித்துக் காட்டுவதைப் பாருங்கள்!

''எண்ணிலா அருந்தவத்தோன்
இயம்பிய சொல்
மருமத்தில எறிவேல் பாய்ந்த
புண்ணில் ஆம் பெரும் புழையுள
கனல் நுழைந்தால்
எனச்செவியில் புகுதலோடும்
உன்நிலா வியதுயரம் பிடித்துநத
ஆருயிர் நின்று ஊசலாடக்
கண்ணிலலான் பெற்றிழந்தான் என
உழந்தான்
கடும் துயரம கால வேலான் ''

பாடலின் கருத்து; தவத்தின் வலிமைமிக்க உடையவரான விசுவாமித்திரரின் ''இராமனைத் தன்னுடன் அனுப்ப வேண்டும்'' என்ற சொல்லைக் கேட்டவுடன், தசரதனுக்கு எப்படியிருந்ததென்றால், தன்னுடைய உடலில் ஏறகெனவே வேலால் குத்தப்பட்டப்புண் ஆறுமலிருந்து, அந்த இடத்திலே மீண்டும் ஒரு

அனல் கொள்ளியை எடுத்துச் சொருகினுல் எப்படி இருக்குமோ அப்படி இருந்ததாம.

ஏற்கெனவே தசரதன் உள்ளத்தில் ஒரு துயரம் குடி கொணடிருந்தது. அது ஒரு முனிவருடைய சாபம். இந்நிலையில் இந்தத் துயரச் செய்தியைக் காதால் கேட்டவுடன், கண்ணை இழந்த குருடன், மீண்டும் கண்ணைப்பெற்று இழந்த மாதிரி இருந்ததாம். ஆனுலும் எண்ணிலா அருந்தவமியற்றிய ஆசானிடம் இராமனை அனுப்புவதா? இல்லை யெனக் கூறுவதா என்ற நிலை; தன் உயிர் போவதா இருப்பதா எனக் கேட்டமாதிரி இருந்ததாம். இது கம்பனின் சொல்லோவியம்.

இம்மாதிரி இராமனை விசுவாமித்திரருடன் அனுப்புமபோது ''தன் உயிர் போன்ற இராமனை விட்டுப் பிரிந்திருக்க முடியாது'' எனத் தத்தளித்துக் கொணடிருந்தான தசரதன் என்பது விளங்கும்.

இங்கு இந்த இடத்தில் கம்பனுடைய நினைவு அலைகள் நன்குப் புலப்படுகின்றன. விசுவாமித்திரர் ''இராமனைத் தன்னுடன் அனுப்புக!'' எனக் கேட்டபோதும்,

'' எண்ணிலா அருந்தவத்தோன்
இயம்பிய சொல
மருமத்தில் எறிவேல பாய்ந்த
புண்ணிலாம் பெரும் புழையுள்
கனல் நுழைந்தால
எனச்செவியில் புகுதலோடும ''

எனக் கூறிய கம்பன், கைகேயி ''இராமன் காட்டிற்குப் போகத்தான் வேணடும்'' எனக் கேட்ட போதும்

'' இந்தக் கெடுஞ்சொல் அவ்
வேழை கூறுமுன்னே
வெந்தக் கொடும் புணில்
வேல் நுழைந்தது ஒபப ''

என முன்பு கூறியக் கருத்தை மீண்டும் கூறுவதை இங்குக் காணலாம். விசுவாமித்திரர் கேட்கும்போதும் ''வெந்த கொடிய புண்ணில் நெருப்பைக் கொட்டியதுபோல்'' என்றும், கைகேயி கேட்டபோதும ''வெந்தக் கொடிய புண்ணில் வேலைப் பாய்ச்சியது போல் உள்ளது'' எனவும் நினை வாற்றலோடு கூறுகிறுர் கம்பர். மேலும் தசரதன் என்ற உடம்புக்குள் இராமன் என்ற உயிர் குடி கொண்டிருந்தது என்னும் கருத்தைக் கம்பர் தெளிவுப்படுத்துகின்றுர்.

'' நின்மகன் ஆள்வான் நீ இனிது
ஆள்வாய நிலமெலாம
உன்வயமாமே ஆளுதி தந்தேன
உரைக் குன்றேன்
என்மகன, என்கண், என்உயிர்
எல்லா உயிர்கட்கும்
நன்மகன் இந்தநாடு இறவாமை
நய என்றுன் ''

உன் மகன் பரதனே அயோததியை ஆளட்டும். ஆனுல் என மகன் இராமன், என் கணமணி இராமன், என் உயிர் இராமனை மட்டும் காட்டிற்குப் போகச் சொல்லாதே. தயை புரிவாய'' எனத் தசரதன் கேட்கின்றுன், கெஞ்சுகின்றுன். மேலும் ''இன்று என் கண் எதிர் நின்று கழிவானேல் உய்யேன் நங்காய், உன் அபயம் என்னுயிர்'' என்றுன்.

''இராமன் என் கண முன்னில்லாது போய்விடுவானுகில், நான் பிழைத்திருக்க மாட்டேன். ஆதலால் என்னுயிர் உனக்கு அடைகலம்'' என்றுன்

இராமன் கானகம் சென்றுல் என்னுயிர் போய்விடும் இது ஒரு முனிவரின் சாபம் என்ற விளக்கத்தை கைகேயி இடம் கூறி உள்ளான். இது முதல் தசரதன் உள்ளத்தில துயரம குடி கொண்டிருந்தது இத்துயரம குறைந்தபாடில்லை. மேலும் வளர்ந்து கொண்டே வந்தது. இதனை,

'' மூன் நாள் ஒரு மா மூனிவன்
மொழியும் சாபமுளது என்று
அந்நாள் உற்றது எலலாம்
அவளுக்கு அரசன் மொழிவான்

என்பதிலிருந்து அறியலாம்.

இப்படியெல்லாம் அஞ்சிக் கேட்டும், கெஞ்சிக் கேட்டும் கைகேயி மனம் மாறவில்லை, மனமிரங்கவில்லை.

தசரதன் மனம குழப்பமடைநது விட்டது. கைகேயின் சொல்லம்பு துயரமாக மாறிவிட்டது. தசரதன் கூறுகின்றுன்:

'' நா அம்பால என ஆருயிர் உண்டாய்
இனிது ஞாலம்
பாவம பாராது இன்னுயிர் கொள்ளப
படுகின்றுய்

''நா அம்பால் என் உயிரைப்போக்குகிறுய்'' என்பது ''இராமன் கானகம் புகவேணடும் என நாவால் சொல்லி என் உயிரைப் போக்குகின்றுய்''என்பதில் இராமன் உயிரே என் உயிர் என்பது விளங்கும்.

'' வேய் உயா கானில தானும
தமபியும மிதிலைப் பொன்னும
போயினன என்றுன் எனற
போழ்தே ஆவி போனுன ''

உலகிலுள்ள எல்லா உயிர்களையும அன்புடன் நேசித்த தசரதனுக்கு, இராமன் பிறந்த பின் இராமனே உடலும் உயிருமாகி விட்டான். விசுவாமித்திரர் ''இராமனைத் தனக்குத் துணையாக அனுப்புக'' எனக் கேட்டது முதல் இராமன் திருமணம் செய்துக் கொள்ளும் வரை மகனைப் பார்க்காமலிருநத தசரதனுக்கு இராமன் பிரிவு வேதனையாக இருநதது. அதன்பின் இராமன கானகம சென்றவுடன் தசரதனின் உயிரே போய் விட்டது.

வயதான தன் பெற்றேர்களுக்கு, தாகத்திற்குத் தணணீர கொணடு வரச் சென்ற தன்மகன் உடம்பில தசரதனுடைய வில்லம்பு பாய்ந்து உயிர்விட்டான். இதை அறிநத அமமுனிவர் புத்திர சோகமடைந்து சினங்கொண்டு இட்ட சாபத்தினுல் தசரதன உள்ளத்தில், கைகேயியின் சொல்லம்பு பாய்ந்து புத்திர சோகத்தினுல் (சாபததின்படியே) தசரதனும உயிர் நீத்தான். ''இராமன் என் உயிர்'' என்பதும் உண்மையாயிற்று.

★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்

**அத்தியாயம்—16.**

**பகுதி—3.**

ஏவ்வுயிரையும் தன்னுயிர் போல் நினைக்கும மனப்பக்குவம எவனிடம் காணப்படுகிறதோ அவனே உண்மையில் அஹிமஸாவாதியாகத் திகழ முடியும் வாடிய பயிரைக் கண்ட போது எவரது மனம் வாடுகிறதோ அவரே உணமையில் அஹிம்ஸாவாதியாவார்.

## ஸத்யம் :

உள்ளதை உள்ளபடி உரைபபது ஸத்யமாகும். எந்த நிலையிலும், பொய் சொல்லாதிருத்தல் என்பது ஒரு மாபெரும் தெய்வீகப் பண்பாகும் 'ஸத்யம்' என்ற ஸம்ஸ்கிருதச் சொல் உண்மை, வாய்மை மற்றும் மெய்மை என்ற மூன்றின் தொகுப்பாக பொருள்படுகிறது. உள்ளத்தால், பேச்சால் மற்றும் செயலால பொய்யாதிருத்தல ஸத்தியத்தைக் கடைபிடிப்பதாகிறது ஸத்தியததைக் கடைபிடிப்பவனுககு ஆரம்பக் கட்டததில் பல்வேறு இடுக்கண்கள் எதிர்படும். ஆனால் அவையே அவனுக்குப் பின்னர் பெருவாழ்வுக்கான படிக்கறகளாக மாறி அமையும்.

## அக்ரோத :

க்ரோதம் என்றால் சினம் எனறு பொருள். அக்ரோதம் எனறால் சினமின்மை. 'சினம என்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என்று சினத்திற்கு வள்ளுவர் ஒரு அழகான பட்டம் தருகின்றார். தன்னையும் அழித்து, தன்னைச் சுற்றியவர்களையும் அழிக்க வல்ல தனி ஆற்றல் இந்தச் சினத்திற்கு உண்டு. சாதனையின் முதற்படி சினத்தை வெற்றி கொள்ளுதலே யாகும். சினத்தால் அழிந்த சாம்ராஜ்யங்கள் பலப்பல. சினத்தால் சீரழிந்த குடும்பங்கள் மற்றும் தனிநபா வாழ்வுகள் ஏராளம, ஏராளம். எந்த நிலையிலும் சினப்படாதிருத்தல் மகான்களின் தனிப்பெரும் பண்பாகும். சினம் அடைகையில் உடலில் ரத்தம் கொதிப்படைந்து பல்வேறு வியாதிகள் உணடாகின்றன. தாய்மார்களிடம் ஏற்படும் சினம் பாலையும் விஷமாக்கும்.

சுவாமி ராமதாஸ், சுவாமி சிவானந்தர், பகவான் புத்தர், மகான் ஏசுநாதர், பகவான் ரமணர் போன்றோரது வாழ்வை ஆராய்ந்தால் சினத்தை அவர்கள் வென்றிருந்த சீரிய பாங்கு தெற்றெனத் தெரிய வரும். சினத்தை அடக்கினாலே போதும் நம் வாழ்வில் மன அமைதியும், மகிழ்ச்சியும் படிப்படியாக அதிகரிக்கும். வாழ்வில் ஆரோக்கியமும் பெருகும்

## த்யாக :

'தியாகத்தினால்தான் பெருநிலையை அடைய முடியும். (த்யாகேனைகே அம்ருதத்வமானசு:) என்பது உபநிடத வாக்காகும். 'தியாகம்' என்றால் 'துறவு' என்பது பொருள். 'ஸந்யாஸம்' என்றும் இது பொருள் படும். எதைத் 'தியாகம' செய்ய வேண்டும்? 'யான்' 'எனது' என்ற அபிமானத்தைத் தியாகம் செய்ய வேணடும். ஆசையைத் தியாகம் செய்ய வேணடும். பற்றுதலைத் தியாகம் செய்ய வேண்டும். பொருளில் ஆசை குறையக் குறைய மனதில் அமைதியும் ஆனந்தமும் அதிகரிக்கும். ஆசையறறவனே உண்மையில் பெரும் செல்வந்தனாவான். உண்மையிலேயே ஆசைகளை முற்றும் வென்றவனின் காலடியில் உலகமே விழுந்து கிடக்கும். மகான்களின் ஆசிரமங்களில் பொன்னும், பொருளும் குவிவதன் ரகசியம் இதுதான். 'ஆசைப் படப்பட ஆய்வரும் துன்பம் ஆசை விடவிட ஆனந்தமாமே' என்பது பொருள் பொதிநததொரு கூற்றாகும்


திரு. டி. கே. நாராயணன,
M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.


## சாந்தி :

அமைதி ஒரு தெய்வீகப் பண்பாகும். புறத்தே பல்வேறு செயல்களில் ஈடுபட்டாலும அகத்தே அமைதியோடிருப்பதுவே ஆன்றோர்களுக்கு அழகாகும். சாந்தியை அடைவதுவே மனித வாழ்வின் இலட்சியமாகும்; இதனால்தான் உபநிடத மந்திரங்கள் மற்றும் நமது பிரார்த்தனைகள் யாவும் இறுதியில் சாந்தி மந்திரத்துடன் முடிவடைகின்றன. கடலின் மேல் மட்டத்தில் பயஙகரமாக அலைகள் கொந்தளித்துக் கூத்தாடினாலும், அடிமட்டத்தில் அமைதி திகழ்வது போல், லௌகிக வாழவில் பிரச்சினைகள் பல மலைபோல் வந்து மோதினாலும், உள்ளத்தே சற்றும் கலங்காது அமைதியோடு இருப்பவர்கள் சான்றோர்கள். இநதப் பெருநிலையை அடைவதற்கு, 'நடப்பது அனைத்தும் அவன் அருளால், நான் ஒரு கருவி மாத்திரமே', என்ற மனோபாவம் நம்மிடம் வரப் பெறுதல் வேணடும்;

## அபைசுனம் :

'குறுகிய மனப்பாங்கு அற்றிருத்தல்' என்று இந்தச் சொல் பொருள் படுகிறது. புறத்தே பெரியவர்கள் போலத் தோன்றினாலும், அகத்தே

சிறியவர்களாகத் திகழும் பலரை நாம் வாழ்வில் சந்திக்கிறோம். பணம் மிகப் படைத்திருந்தாலும் வேலைக் காரர்களிடமும், கூலிக்காரர்களிடமும் சின்னஞ்சிறு தொகைக்குக்கூட கசடுதல் பிசுனாரிகளின் இயல்பு. டஜன் கணக்கில் கணகவர் உடைகள் தங்களிடம் இருந்தாலும் அவற்றில் ஒன்றைக் கூட, ஏன், கிழுந்த உடையைக் கூட ஏழை ஒருவனுக்குக் கொடுக்க மனம் வராத எத்தனை பேர் நம்மிடையே உளர்? காப்பியில் முதல் டிகாக்ஷன் தனக்கு, கழிவு நீர் வேலைக்காரிக்கு என்ற மனப் பாங்கு கொண்டவர்கள் எத்தனை பேர் நம்மிடையே உளர்? இத்தகைய 'பிசுனாரித்தனம்' இல்லாதிருத்தல் ஒரு தெய்வீக இயல்பாகும்.

## தயா .

அல்லற்படுவோரைக் கண்டு இரக்கம் கொள்ளுதல் தயை ஆகும். 'தயை' உடைத்திருப்பது தெய்வீக இயல்பு. அது அற்றிருப்பது அரக்க இயல்பு. மூட்டைப்பூச்சி போன்றவற்றைக் கொல்லுதல் வெட்டுக்கிளியை நூலில் கட்டிச் சுண்டி இழுத்து விளையாடுதல் இவை போன்ற செயல்கள் அனைத்துமே தயை அற்ற செயல்களாகும். நொண்டி நடந்த ஆட்டுக் குட்டியிடம் தயை கொண்டு அதைத் தன் தோளின் மேல் போட்டுக் கொண்டு, பிம்பிசார மன்னனின் அவைக்குச் சென்று தர்க்கம் செய்து பலியிடப் பட்ட இருந்த ஆயிரக்கணக்கான ஆடுகளைக் காத்தாரே புத்தர் அவர் தயாமூர்த்தி.

## அலோலுப்த்வம் :

பிறர் பொருளை விரும்பாமை என்பது இதன் பொருள். எவ்வளவு தான் நம்மிடம் இருந்தாலும் இன்னும் வேணடும் என்று அவாக் கொள்ளுதல் கீழான மனித இயல்பாகும். பிறர் பொருளை எந்நிலையிலும் விரும்பாதிருத்தல் சீரியதொரு தெய்வீகப் பண்பாகும்.

## அசபலம் :

பேச்சிலும், செயலிலும் உறுதியோடிருப்பது சான்றோரின் இயல்பாகும். 'சபலம்' என்றால் சலிக்கும் தன்மை என்பது பொருள். எதற்கெடுத்தாலும் சிலர் இதுவா அதுவா என்று மனம் சலிப்பர். சிலர் தங்கள் உடலின் ஏதாவது அவயத்தை காரணமின்றி ஆட்டிக் கொண்டிருப்பர். அவர்களது மனம் உறுதியற்றது என்பதை அது காட்டுகிறது. சிந்தனை, சொல் மற்றும் செயலில் உறுதியுடன் இருத்தல் ஒரு தெய்வீக இயல்பாகும்.

## மார்தவம் :

மிருதுத்தன்மை பண்பட்டவர்களிடம் மட்டுமே காணப்படும் ஒரு சீரிய இயல்பு ஆகும்.

## ஹ்ரீ :

வெட்கம் என்பது இதன் பொருள். வேதத்துக்குப் புறம்பான, உண்மைக்கு மாறான, சமூகத்துக்கு விரோதமான செயல்களைச் செய்வதற்கு ஒருவன் வெட்கப்பட வேண்டும். அறத்திற்கு மாறான செயல்களைச் செய்ய ஒருவன் நாண வேண்டும்.

தேஜ: க்ஷமா த்ருதி: சௌசம்
அத்ரோஹோ நாதி மானிதா |
பவந்தி ஸம்பதம் தைவீம்
அபிஜாதஸ்ய பாரத ‖ (16-3)

'தைரியம், பொறை, மன உறுதி, தூய்மை, வஞ்சகமின்மை, செருக்கின்மை ஆகிய இவைகள் அர்ஜுனா! தெய்வ சம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன.

## தேஜஸ் :

ஆற்றல், ஒளி, தைரியம் என்று பலவாறாக இச்சொல் பொருள்படும். மகான்களின் முகமண்டலம் ஒளி மிகுந்ததாகக் காணப்படும். அது தேஜஸ் ஆகும். மானஸீக தேஜஸ் மற்றும் சாரீரிக தேஜஸ் என இது இரு வகைப்படும். மனத்தகத்து ஸாத்விக இயல்புகள் அமையுமானால் அது மானஸீக தேஜஸாக ஒளிர்கிறது. மகான்களைப் பார்த்தவுடன் நமக்கு உண்டாகும் ஒருவித அமைதிக்கும், மகிழ்ச்சிக்கும் காரணம் இத்தகைய தேஜஸினாலேயேயாகும். நாரதரின் முகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே கொள்ளைக்காரனான ரத்னாகரன் ஓங்கிய வாளைக் கீழே போட்டு விட்டு அவர் காலடியில் வீழ்ந்தான். தெய்வீக தேஜஸின் இயல்பு இத்தகையது.

(தொடரும்)

## தெரிந்து கொள்ளுங்கள் !

பெண்கள் தலைக்கு ஸ்நானம் செய்தவுடன் தலை மயிர் நுனியினை உடனே முடியவேண்டும். தலையை விரித்துக்கொண்டிருக்கலாகாது என இராமாயணம், மகா பாரதம், சிலப்பதிகாரம் முதலியன நமக்கு அறிவுறுத்துகிறன்றன.

சீதை தலைவிரிக்கோலத்துடன் அசோகவனத்தில் இருந்ததினால் இராவணன் மாண்டான்; இலங்கை எரிந்தது.

திரௌபதி தலை விரிக்கோலத்துடன் இருந்ததினால் துரியோதனன் மாண்டான்.

கண்ணகி தலை விரிக்கோலத்துடன் இருந்ததினால் மன்னனின் வெண்கொற்றைக் குடை சாய்ந்தது. மதுரை எரிந்தது.

அனுப்பியவர்: A. N. சுப்ரமணியம், குடியாத்தம்.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

போது தனது தமையனார் ஸம்பாதியைப் பார்த்து விட்டுத் திரும்பிய கழுகரசனான சடாயுவும் அங்கு வந்து சேர்ந்தான். விராதனனுடன் லக்ஷ்மணன் போரிடுவது கண்டு தானும் விராதனைத் தாக்கத்தொடங்கினான். இறுதியில் விராதனை லக்ஷ்மணன் துண்டு துண்டாக வெட்டி கால்களால் மிதித்து நசுக்கிப் புதைத்து முக்தியடையச் செய்தான்.

விராதனது மரணத்தால்வெகுண்ட சூர்ப்பணகை ஸீதையை தூக்கிக் கொண்டு ஓடினாள். இதைக் கண்ட லக்ஷ்மணன் ஸீதையைக் காப்பாற்ற வேண்டி,கத்தியால் சூர்ப்பணகையின் காது, மூக்குகளை வெட்டி அங்கஹீனமாக்கி விரட்டினான். இதனால் போரிட வந்த கரதூஷணாதி அரக்கர்களையும் இராமன் அழித்தான். இச் செய்திகளையெல்லாம் அறிந்த இராவணன் ஸீதையை கபடமாக தூக்கிச் சென்று இலங்கையில் சிறை வைத்தான். வழியில் எதிர்த்த ஜடாயுவையும் கொன்றான். ஸீதையைக் காணாது தவித்த இராம லக்ஷ்மணர்கள் கபந்தன் முதலியவர்களால் இராவணன் தேவியை எடுத்துச் சென்றதை அறிந்தனர். லக்ஷ்மணன் கையால் ஜடாயுவுக்கு ஈமக்ரியைகள் நடந்தன. பிறகு இராம லக்ஷ்மணர்கள் வானரோத்தமனான சுக்ரீவனிடம் நட்பு பூண்டனர். இதை அறிந்த வானர ராஜாவான வாலி இராமன் மீது பகைமைகொண்டான். தன் நண்பனான இராவணனது எதிரி தனக்கும் எதிரி என்று கருதி இராமனைப் போருக்கழைதது கற்பாறைகளை வீசினான். இராமபிரானும் பாறைகளைத் துகளாக்கி ஒரே பாணத்தால் வாலியைக் கொன்றார். சுக்ரீவனுக்கு வானர அரசாட்சியை அளித்து வாழ்த்தினார். மழைக்காலம் முடிந்ததும் வானர வீரர்கள் ஸீதாதேவியைத் தேடி எல்லா திசைகளிலும் சென்றனர். தெற்கு திசையில் அனுமன் முதலிய வானரர்கள் சென்றனர். ஸம்பாதியின் வார்த்தைப் படி ஸீதை இலங்கையில் இருப்பதாக அறிந்து அனுமன் கடலைக் கடக்க நிச்சயித்தான்.

இதே நேரத்தில் இராவணன் மனம் ஒரு நிலையில் இல்லாமல் இருந்தது. ஸீதை தன்னை விரும்பாததால் ராஜ்ய விவகாரங்களை கவனிக்காது அந்தப்புரத்திலேயே காலம் கழித்து வந்தான். ஆனால் இந்திரஜித் முதலியவர்கள் ஒற்றர்கள் மூலம் அவ்வப்போது இராமனது செயல்களைக் கவனித்து வந்தனர். எனவே அவர்கள் வாலி வதம் அனுமன் தெற்கு கடலை கடக்க முடிவு செய்தது முதலியவற்றை அசுர குருவான சுக்ராச்சாரியார் மூலமாக ஒரு நாடகமாக இயற்றச்செய்தனர். ஸீதையை இராவணன் அபகரித்து வந்ததுமுதல் தொடங்கி நாடகம் எழுதப்பட்டது. பிறகு மந்திரிகள் இராவணனை அடைந்து ஸீதையின் பிரிவால் இராம லக்ஷ்மணர்கள் புலம்பி அழுவதை ஒரு நாடகமாக சுக்ராச்சாரியார் எழுதி இருப்பதாகவும், அதை தேவ ஸ்த்ரீகளான அப்ஸரஸ்ஸுகள் நடித்துக் காட்டப் போவதாகவும் கூறி மேடைக்கு அழைத்தனர். இராவணனும் மகிழ்ந்து நாடகத்தைக் காணவந்தான். விபீஷணன் மகளான அனலையும் ஸீதாதேவியைக் கூட்டிக் கொண்டு திரஸ்கரணி வித்தையால் தங்களைப் பிறர் பார்க்காதபடி மறைத்துக்கொணடு நாடகத்தைக் காண வந்தாள். இலங்கையில் நாடகமும் நடந்தேறியது. விஷயங்களை அறிந்த இராவணன் அனுமனைப் புகவிடாமல் கவனமாக இருக்கும்படி லங்கினிக்கு எச்சரிக்கை செய்தான். வானரப் படை இலங்கை நோக்கி கிளம்பினால் வரும் வழியில் பழமரங்களை வெட்டவும் நீர் நிலைகளை வற்றடிக்கவும், கோட்டைப் பாதுகாப்பை பலப்படுத்தவும் உத்தரவுகளைப் பிறப்பித்தான். அப்படி இருந்தும் அனுமன் தேவியைக்கண்டு கணையாழியைக் கொடுத்து, சூடாமணியைப் பெற்று, இலங்கையை தீக்கிரையாக்கிச் சென்றான். இராம பிரானும் வானரப்படையுடன் கடலில் அணை கட்டிக் கடந்து இலங்கையை அடைந்தனர். இராம லக்ஷ்மணர்கள் கடும்போர் புரிந்து இராவணன், கும்பகர்ணன், இந்திரஜித் முதலிய எல்லா அரக்கர்களையும் கொன்று விபீஷணனுக்கு இலங்கை அரசை அளித்தனர். பிறகு ஸீதா தேவி அக்னிபிரவேசம் செய்தபின் தேவியை இராமன் ஏற்றார்.

அப்போது சூர்ப்பணகை, கூச்சலிட்டுக் கொண்டு ஓடி வந்தாள். ஸீதை இராமனைப்பார்க்கக்கிளம்பிய போது அங்கஹீனமான தான் எதிரில் வந்தது சகுனத்தடை என்று வீரர்கள் தடுத்ததாக முறையிட்டுப் புலம்பினாள். உடனே விபீஷணனது நண்பனான ஸம்பாதி என்பவன், நீயே நடந்தவற்றை யோசித்துப் பார் என்றும், ஸீதையை இராமன் ஏற்க மறுத்து தேவி தீக்குளித்து தேவர்கள் யாவரும் இங்குக் கூடி எழுந்தருள எத்தகைய குழப்பங்கள் நீ எதிரில் வந்ததால் நடந்து விட்டது என்றும் நயமாக எடுத்துரைத்தான். சூர்ப்பணகையும் மனம் திருந்தி ஆறுதல் அடைந்தாள். வானர வீரர்கட்கு ஏராளமான பரிசுகளை விபீஷணன் அளித்தான். பிறகு யாவரும் புஷ்பக விமானத்தில் ஏறி இராமனுடன் அயோத்தியை அடைந்தனர். பிறகு பல இடங்களிலிருந்தும் வானர வீரர்கள் புண்ய தீர்த்தங்களைக் கொண்டு வந்தனர். ஸ்ரீ ஸீதா தேவிக்கும் இராமசந்திர மூர்த்திக்கும் அயோத்தியில் வெகு விமரிசையாக பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டது. நீண்ட காலம் ஸ்ரீ ராமபிரான் அரசாட்சி செய்து பூமண்டலம் முழுதும் பரிபாலித்து தர்மத்தை ஸ்தாபித்தார். அத்தகைய சக்கரவர்த்தித் திருமகனான ஸ்ரீராமனின் திருவருளால் நாமும் பன்னலமும் பெற்று உய்வோமாகுக.

O

# ஸ்ரீ நடராஜர் தத்துவமும் தாண்டவ பேதங்களும்



கோவில் வழிபாட்டில் நடராஜ பெருமான் வழிபாடு மிக முக்கியமானது. ஆருத்தரா தரிசனம் அன்று நடராஜ பெருமான் வழிபாடு மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. நமது முன்னோர்கள் நடராஜ பெருமான் நடன ரூபத்தில் நுண்ணிய சிற்பக் கலைகளுடனும் அரிய பெரிய தத்துவங்களுடனும் அமைத்துள்ளார்கள்.

அந்த நடனக்கோலம் எப்போதும் அசைவைவே குறிக்கிறது. விஞ்ஞானிகள் முன்னால் அணு பிரிக்கக்கூடியது என்றும் அது இரு பாகங்களாக பிரிந்து புரோட்டான எலக்ட்ரான் என்று உள்ளது எனறும் கண்டுபிடித்துள்ளார்கள். அந்த புரோட்டான் என்பது அசைவின்றி ஒரு நிலையாக நிற்கின்றது. எலக்ட்ரான் என்பது அதற்குள்ளே எப்போதும் அசைந்து கொண்டே இருக்கின்றது. விஞ்ஞானிகளால்கூட இந்த அசைவுக்கு விளக்கம் காண முடியவில்லை. ஒரு விஞ்ஞானி "இந்த நிரந்தரமான, முடிவில்லாத அசைவைக் கண்டு மிக மிக ஆச்சரியப்படுகிறேன்" என்று சொன்னார். இதற்கு விளக்கம் நம் சைவ சித்தாந்த சாஸ்திரங்கள்மூலம் காணலாம். எப்போதும் அசைவையே குறிக்கும் உருவமாகிய நடராஜபெருமானின் உருவ அமைப்பு தத்துவம் அதற்கு விளக்கமாக அமைந்துள்ளது. சிவன் எப்போதும் அசைவில்லாதது. சக்திதான் இயங்கிக் கொண்டே இருக்கிறது. "ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரோர்" என்ற அருள் வாக்குப்படி இறைவன் என்றும் ஆடிக்

திரு. எஸ். ராமலிங்கம்
சேலம்-7.

கொண்டே இருக்கிறான். எனவே அனைத்துலகமும் ஆடிக் கொண்டே இருக்கிறது. இந்த செந்தமிழ் நாட்டு மெய்ஞானிகள் அறிவைக் கண்டு மற்ற விஞ்ஞானிகள் வியக்கின்றனர். விஞ்ஞானிகள் விளக்க முடியாத இந்த பரமாணுதாண்டவத்தை சிவதாண்டவம், நடராஜப் பெருமான் திருவுருவம் நமக்குக் காட்டி கலந்து நிற்கிறது.

திருமூலர் சிவயோகப் பயிற்சியில் ஆறு ஆதாரங்களிலும், புருவ நடுவாகிய சிற்றம்பலத்தில் விளங்கும் தாமரைகளில் சிவ என்னும்ஒலியும் அதன் வடிவாகிய செவ்வொளியின் அசைவும், நீல ஒளியின் நிலையுமே ஆனந்தத் தாண்டவம் என்றும் அகமார்க்கத்தில் தியான சொருபமாக காண்பதே

திருக்கூத்து தரிசனம் என்றும் கூறுகிறார். ஆகவே அகமார்க்க தரிசனம் அமையவே புற உலகத்து மக்கள் கண்டு பழக அமைந்தன என்பது தெளிவு:

சிவன் சக்தியாகிய இயற்கையோடு கூடுகிறார். அப்போது அறிவால் அறியப்படும் மந்திரவடிவைத் தாங்குகிறார்.

மந்திரங்களின் ஒலி சக்தி, அதன் பொருள் சிவன்; ஒலியும் பொருளும் கூடிய சொல்வடிவே சிவன் திருமேனி. ஒலியலைகள் வளைவுகளாக பாயும் தன்மையுடையன. ஒலி வடிவான சிவகாமி சக்தி மூன்று வளைவுகளுடனும், அவ்வளைவுகளில் இடை வளைவு மிக்கும், கழுத்து வளைவு, முழங்கால் வளைவு சிறிதுமாயிருப்பதும்ஊன்றியறியத்தக்கது. அவ்வொலி விரைந்து சென்று ஆகாயத்தில் பாயும் தன்மையுடையது. ஒலி பாயும்போது பொருளும் பரவத்தானே செய்யும். ஒலியும் பொருளும் பிரிக்க முடியாதது. சொல்லும் பொருளும் போல் சிவசக்தி பிரிக்க முடியாதது.

மேல் நாட்டு விஞ்ஞானி ஐன்ஸ்டீன் நமது நடராஜ பெருமான் திருவுருவத்தைப் பார்த்ததும் அதன் தத்துவத்தைக் கேட்டு வியப்படைந்தார் என்று சொல்லப்படுகிறது. அதன் ஒலியும் பொருளும் அதன் சக்தியும் Doctrine of Relativity என்ற விஞ்ஞான முடிவுக்குப் பொருத்தமாக உள்ளது என்றும் சொல்லப்படுகிறது.

மேலும் நாம் இறைவனை சச்சிதானந்தம் (சத், சித், ஆனந்தம்) என்கின்றோம். சத்—நிலையானது, சித்—அறிவுடையது, ஆனந்தம்—எப்போதும் பேரானந்தத்தையுடையது. ஆனந்த சொரூபமாய்உள்ளது. இந்த நடனமாடும் கோலம் ஆனந்தமாய் இருத்தலைக்குறிக்கும். நாம் இப்படி யாராவது குதித்தால் என்னப்பா உனக்கு பெரிய ஆனந்தம், ஆனந்த தாண்டவம் ஆடுகின்றாய் என்று கேட்கிறோமல்லமா?

இதை மெய் கண்ட சாஸ்திரம் சிவப்பிரகாசம் என்னும் நூலில் பதிலக்கணத்தில் ஆனந்த உருவாய் அன்றி செலவரிதாய் என்று அறியப்படுகிறது. ஆனந்த சொரூபமாக ஆகாமல் இறைவனை அடைய முடியாது. நாம் ஆனந்த சொரூபமாகவும், வேறு எவ்வித உணர்வும் இருக்காத நிலையை அடைந்தால்தான் ஆனந்த சொரூபமான இறைவனை (பதியை) அடைய முடியும் என்பது சித்தாந்தம். இதைத்தான் நடராஜ பெருமானின் ஆனந்தத் தாண்டவம் நமக்கு உணர்த்துகிறது.

மணிவாசக பெருமான் அச்சோ பதிகத்தில் "கூத்தன் தன் கூத்தை எனக்கு அறியவும் வண்ணம் அருளியவாறு எனக்கு யார் அருள்வார்" என்று பேசுகிறார். கூத்தை கலை புணர்வில் உணர்வர் சிலர்·

யோக நெறியால் உணர்வர் சிலர்
வரலாற்று அடிப்படையில் உணர்வர் சிலர்

மணிவாசகபெருமான் மேற்சொன்னவாறு எனக்கு உணர்த்திய நெறி என் அனுபவ வாயிலாயன்றி உரையால் உரைக்கவொண்ணாது என்கிறார்.

இந்த இறைவன் கூத்தை ஞானியர்கள், சித்தர்கள் பலவித கண்ணோட்டத்தில் உணர்ந்து நமக்கெல்லாம் எடுத்து அருளியுள்ளார்கள். மெய் கண்ட சாஸ்திரங்களில் ஒன்றாகிய உண்மை விளக்கம் வெண்பா 31-ல் சீடர் நூலாசிரியராகிய தன் குருநாதரை நல்லதவம் செய்தவர்கள் காணுமாறு நாதமுடிவில் திருவைந்தெழுத்துக்களால் பொருந்திய ஞான சொரூபமாய் நின்று ஆடிய திருக்கூத்தை அடியேன் உள்ளவாறு காணுமாறு சொல்லியருள்க என்று கேட்கிறார். எனது குருநாதர் ஸ்ரீகுருமகா சன்னிதானம் 229-ம் பட்டம் ஞான ப்ரகாசதேசிக பரமாச்சார்ய ஸ்வாமிகள் தனது உரையில் இதற்கு,

"நாதாந்தத்தில் (நாதமுடிவில்) ஞான சொரூபமாய் நின்று திருக்கூத்து நிகழ்த்துகிறான். நாதத்திலே கடந்த ரூபமாய் நின்று திருக்கூத்து நிகழ்த்துகின்றான். எங்கும் எப்பொதும் இந்தக் கூத்து நிகழ்கின்றது. நாதம் அருவநிலை, நாதாந்தம் அருவநிலையும் கடந்தது. (இந்த இடத்தில் நாம் அணு, பரமாணு இவைகளை வைத்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.) ஞானியர்கள் திருவைந்தெழுத்தை திருமேனியாகக் கொண்டும் திருக்கூத்து நடத்துகின்றார்" என்று உணர்ந்து அருளியுள்ளார்கள். அஞ்செழுத்து என்பது என்ன என்று பார்ப்போம். அது நமசிவாய என்பது ஆகும். இது ஸ்தூல பஞ்சாக்கரம்: சிவாயநம என்பது ஆக்கும் பஞ்சாக்கரம்.

பஞ்சாக்கரத்தில்

சி — சிவன்
வா — அருள்—சக்தி
ய — உயிர்—ஆன்மா
ந — திரோதான சக்தி
ம — ஆணவம் என்பவற்றைக் குறிக்கும்

ஸ்தூல பஞ்சாக்கரம் சூஷ்ம பஞ்சாக்கரத்தில் அருள்சிவம், திரோதம், ஆணவம் இவைகள் சூழியகாரமாகிய உயிர்நடு நிற்கின்றது. உண்மை விளக்கம் வெண்பா 36-ல் 'எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே நட்டம்" என்று ஆன்மாக்கள் சிவபெருமான் ஆடும் திருக்கூத்துக்கு இடம் என்று அருளுகிறது.

இறைவன் திருக்கூத்து ஒவ்வொரு கருத்து நோக்கி வெவ்வேறு பெயரால் உணர்த்தப்படுகிறது. அவன் செய்யும் தொழில் நோக்கி பஞ்சகிருத்திய தாண்டவம் என்றும், மற்றும் ஞானநடனம், ஆனந்த நடனம்,ஊன நடனம்-தூலநடனம், சூக்கும நடனம், பஞ்சாக்கர நடனம் என்றும்

மற்றும் அனைத்து தாண்டவங்கள் எல்லாம் ஒவ்வொரு நிலையைக் குறித்து ஏற்பட்ட பெயர்கள் ஆகும்.

சிவபெருமான் திருவைந்தெழுத்துக்களைத் திருமேனியாகக் கொண்டு அவற்றின் வாயிலாக தன்னை உணர்வார் உணர்வில் இருந்து கட்டு நீக்கி வீடு நல்கி வருகின்றான். அது சிவனுக்கு ஒரு திருக்கூத்து. இக்கூத்தில் உயிர்களுக்குச் செய்யும் மறைப்பு தொழில் என்றும் அருள் தொழில் என்றும் வேறுபடுகின்றது. மறைப்பு கூத்து ஊன நடனம் என்றும், அருள் தொழில் ஞான நடனம் என்றும் சொல்லப்படுகிறது.

ஊன நடனத்தில் — திருவடி — ந
திருவயிறு — ம
திருத்தோள் — சி
திருமுகம் — வா
திருமுடி — ய

இது தூல பஞ்சாக்கர திருமேனி. இது உயிர்களுக்கு வினைப்பயனை ஊட்டுதல் எனவே இதை ஊன நடனம் என்பர் (உண்மை விளக்கம் வெண்பா 33) உண்மை விளக்கம் வெண்பா 34-ல்

துடி — சி
வீசுகை — வா
அபயகரம் — ய
அங்கி(தீ) — ந
முயலகன் — ம

என்று அருளப்படுகிறது.

இது சூக்கும பஞ்சாக்கர திருமேனி. இதை ஞான நடனம் என்பர். உண்மை விளக்கம் வெண்பா 34ல் ஐந்தொழில் செய்யும் கூத்து பற்றி பேசப் படுகிறது.

| | | |
|---|---|---|
| துடி | — | தோற்றம் |
| வீசு திருக்கை | — | காத்தல் |
| தீ ஏந்திய கை | — | அழித்தல் |
| ஊன்றுமலர்ப்பாதம் | — | மறைத்தல் |
| அபயதிருக்கை | — | அருளல் |

உண்மை விளக்கம் வெண்பா 34-ல் ஆன்மாவை அருளில் அழுத்தல்பற்றி பேசப்படுகிறது. அதுதான் எந்தையார் பாதம் என்று அருளப்படுகிறது. "மாயைதனை உதவி — வல்வினை சுட்டு—மலம்சாய அமுக்கி, அருள் தான் எடுத்து ஆனந்தவாரயில் ஆன்மாவை அமுத்தல்தான் எந்தையார் பாதம்" என்கிறார்.

உண்மை விளக்கம் வெண்பா 38ல் ஞானிகள் யான் எனது என்று அற்ற இடத்தில் ஆனந்தமாக ஆடும் அருள் மூர்த்தியாகக்கண்டு பரமானந்தத்தை அனுபவிக்கிறார் எனப்படுகிறது. பின் வெண்பா 39ல் "பரையிடமா நின்று மிக பஞ்சாக்கரத்தால்" என்றும் "வரைமகள் காணும்படி" என்றும் பேசப்படுகிறது. மிகு பஞ்சாக்கரம்-சிகாரம். அதில் சிகாரத்தில் மட்டும் நடனமும், சிவகாமியம்மன் தரிசனமும் பேசப்படுகிறது. அவர்கண்ட திருக்கூத்து அற்புதமானது. திருமூலர் இக்கூத்தினை சிவானந்தக்கூத்து சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக் கூத்து என்று ஐவகையாகக் காண்கின்றார்.

சிவானந்தக்கூத்து: பாசஞானத்தையும், பசுஞானத்தையும் கடந்து ஞானானந்த நடனம் பண்ணுகிற பரசிவத்திற்கு சதா ஆனந்த வடிவாகிய சக்தியே அரங்கம். அவ்வரங்கத்தில் ஆனந்த வடிவே வீற்றிருப்பது ஆனந்தக் கூத்து. இதற்கு ஞான உலகத்தையே நடக்க வைக்கும் கலையுணர்ச்சி மட்டும் போதாது திருமூலரால் மட்டும் உணரப்படும்.

சுந்தரக்கூத்து: ஞானமே திருமேனியாக ஞான சக்தியாகிய அரங்கத்தில் ஞானானந்த கூத்தாடிய இறைவன் பரம ஞானிகளுக்கேயன்றி ஏனையோர்க்கும் தமது திருக்கூத்து தரிசனம் தந்தருள சுந்தரககூத்து ஆடுகின்றான். அப்படி ஆடுகின்றவன் பிண்டத்திலும் கருத்தில் தியானிக்கப்படும் பொருளாக நின்றாடுகிறான். மூலாதாரம் முதலாக சுழுமுனை நாடி வரையில் உள்ள ஆறு ஆதாரங்களில் ஆடுகிறான். இதற்கு மேலாக சிதாகாலத்தில் (ஞானமண்டலத்திலும்) ஆடுகின்றான். எல்லா உலகங்களும் அவன் திருவடிக்கீழ் அடங்க அவன் ஆட்டவழியே ஆடுகின்றான். (சித் ஆகாசம்–சிதம்பரம்) சிதம்பர ரகசியம் என்பது இதுதான். இதுவே சுந்தரக் கூத்து என்கிறார்.

பொற்பதிக் கூத்து: சுந்தரக்கூத்தில் ஒரு சிலரே பயனடைவர். அந்நிலையை உணர முடியாத பலருக்குப் பயன்பட வேண்டி அருவுருவத் திருமேனியில் ஈசானுதி பஞ்சமுகங்களோடு நின்று ஆடுவது தனிப்பெருங் கூத்து எனப்படுவது. துவாத சந்த பெருவெளியில் சுந்தரக்கூத்து ஆடிய இறைவன் சிவலிங்கமாகிய உபாய உபயத்துள் நின்று ஆடுதலால் இது பொற்பதிக் கூத்து.

பொற்றில்லைக் கூத்து: அரு உருவத் திருமேனியில் ஞானமும் பாவனையுமாகிய திருமேனியினின்று காளி முதலான ஆணவாதி சக்திகளோடு ஆடினும் அதனை அறிந்துய்யவல்ல பக்குவான்மாக்கள் சிலராதலால் பரிபாகம் குறைந்தார்களுக்குப் பயனருள திருஉளங்கொண்டு தில்லையம்பலத்தில் உருமேனி தாங்கி நின்று தாண்டவமாடுகிறான். இதனை நீங்கள் தில்லைத் தலத்தில் பொன்மன்றம் என்ற இடம்; அதிலுள்ள சிற்சபையில் சிவன் ஆடு கின்றான் என்று எண்ணக் கூடாது. பூமியை ஒரு புருஷ வடிவமாக எண்ணுங்கள்.

சந்திரன் — இடையநாடி — இமயமலை
சூரியன் — பிங்கலைநாடி — இலங்கை
முதுகெலும்பு தண்டில் நடுபாகம் — சுழுமுனைநாடி–தில்லைவனமாகிய சிற்றமபலம் அதிலிருந்து ஆடுகின்றான்.

அறபுதக் கூத்து:- இவ்வணணம் கூத்தின விகறபங்களையும் அவை ஆடப்படும் இடங்களையும் புறத்தே பார்ப்பதைக் காட்டிலும் அகத்தே பார்ப்பது மேலானது. சிற்றம்பலம் என்பது நெற்றிக்கு நேரே புருவத்திடைவெளிதான். அங்கு ஊன்றிப் பார்த்தால் சி என்னும் மந்திரம ஒளி விட்டுத் தோன்றும். அதுதான் கூத்

தப் பெருமான் இருக்கும் இடம். ஆடுகின்ற அவன் திருக்கூத்து ஐந்தெழுத்து வடிவே. இவ்வண்ணம் அவன் உருவையும் ஆட்டத்தையும் உணர்வதே அற்புதக்கூத்து.

இந்தத் தாண்டவங்களில் பல தாண்டவ பேதங்கள் உண்டு. 108 தாண்டவ பேதங்கள் உண்டு என்பார்கள். ஏழுவகை தாண்டவம், ஒன்பது வகை தாண்டவம் என்று சொல்லப்படுகிறது. இந்த தாண்டவங்களையே ஏழு ஸ்வரங்களை இணைத்து வந்தது என்று ஒரு கருத்து நிலவுகிறது. திருமூலர் அசபா நடனம் என்று ஒரு தாண்டவத்தைக் குறிக்கிறார்.

அசபா நடனம்: திருவாரூரில் தியாகேச பெருமாள் திருமாலின் இதயக் கமலத்தில் வீற்றிருப்பதால் மூச்சினை வெளியே விட்டு உள்ளுக்கு இழுக்கும் போது இதயம் அசைந்து ஆடுவதால் இவரும் அசைந்தாடும் பெருமகனாக இருக்கிறார். அதனால் அவருக்கு "இருந்தாடிய அழகர்" "மணித் தண்டில் அசைந்தாடியபெருமான்" என்னும் பெயர் வழங்குகிறது. பிராணவாயுவின் இயக்கத்திற்கு ஏற்ப அசைந்தாடுகிறார். இது அசபா நடனம எனப்படுகிறது. அசபா—சபிக்கப்படாதது. ஆடல் வல்லான் என்னும் நூலில் மூச்சுக் காற்றை வெளிவிடும் போது "ஹம்" என்றும், உள்ளிழுக்கும் போது "சம்" என்றும் எண்ணி செய்தல் வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

அதற்கு நான், — அவன் என்பது பொருள். இரண்டும் கூடும் போது ஹம்சம் என்று ஆகிறது. நான் அவன் என்றாகிறது. ஆன்மாவாகிய "நான் சிவமாகிறேன்" என்று தியானிக்கலாம். இந்த நடனம நாதாந்த நடனம், புஜங்க நடனம் எனப்படும். இதை அருணகிரிபெருமாள் "சந்திர (இடைநாடி), சூரியன் (பிங்களநாடி) தாமும் அசபையும் விந்து நாதமும் ஏகவடிவமும் தனி சொரூபமதாக உரைவது சிவயோகம்" என்கிறார். சுழு முனைநாடி என்பது முதுகெலும்பு தண்டின் நடுவே உள்ளது. இது அசைகிறது ரிஷிகேஷ் ஸ்வாமி சிவானந்தா இதை ஸ்வர யோக பயிற்சி என்று அருளுகிறார். தாண்டவங்களில் எத்தனை பேதங்களில் இருந்தாலும் அவை எல்லாம் ஐந்தொழில்களை பலவகையில் குறிப்பிடும். இவை எல்லாம் அருளில் அடங்கும். நடராஜபெருமான் பலவித ஆயுதங்களையும், பொருள்களையும் வைத்திருப்பதாக அமைகிறது. அதன் தத்துவம் என்ன என்பதைப் பார்ப்போம். காமிகாகமம் கரம், சிரம், நிலை கருவிகள் இவைகள் பற்றிய தத்துவங்களைக் கூறுகின்றது.

கரம்: இறைவன் விராட் சொரூபம் என்பது வேதம். இறைவனுக்கு உலகமே வடிவாகும் போது எட்டு திசைகளும் அவன் கைகள் ஆகின்றன. அதனால்நான்கு கரங்கள், எட்டு கரங்கள் உள்ள நடராஜ பெருமான் உருவ அமைப்புஇருக்கின்றது. எட்டு திசைகளோடு விண்ணும் மண்ணும் ஆகிய மேற்றிசை, கீழ்த்திசை இவைகளைச் சேர்த்து பத்து திசைகளும் பத்து கரங்களாக அமைகிறது என்று காமிகாகமம் கூறுகிறது.

திருவடி: அத்திருவடி நம்மைப் போல் வழிநடக்கவும், மிதிக்கவும் அல்ல. இரண்டு திருவடிகளும் இரண்டு ஆற்றலைக் கொண்டன.

ஒன்று—மறைப்பாற்றல்
இரண்டு—அருளாற்றல்

மறைப்பாற்றல் உயிர்களை வினை போகங்களை அருந்தச் செய்து மலபரிபாகம் இருவினையொப்பு வருவிக்கவும் அவசியம். அவை தந்த உயிர்கள் இறைவன் அருளை ஏற்க தகுதியுடையவை ஆகின்றது. அத்தகுதியை வரவழைப்பதும் தகுதி பெற்ற உயிரை தன்னிழல் தந்து காப்பதும் குஞ்சிதபாதமாகிய தூக்கிய திருவடியேயாகும்.

இத்திருவடிகளில்:

திரோதான திருவடி—யான், எனது என்னும் இருபற்றை ஒழிப்பது. (ஊன்றிய பாதம்)

தூக்கிய திருவடி — பற்று விட்ட உயிர்களை பேரின்பத்துக்கு அழுத்துவது.

முக்கண்: ஒளிமிகவும் அவசியம். புறசசோதியாகிய சூரியன், சந்திரன், தீ ஆகிய மூன்று சுடர்களைக் கண்களாகக் கொண்டு இறைவன் விஸ்வரூபமாக விளங்குகிறான். காமிகாகமம் இச்சா, ஞான, கிரியைகளாக இறைவன் திருக்கணகள் விளங்குகின்றன என்கிறது.

குமின் சிரிப்பு: "உள்ளதன் மலம் வாட்டி வினைகெடுத்து நிலையளிக்கும் புன்முறுவல்" என்பது பெரியோர்கள் வாக்கு. புன்முறுவல் உயிர்களின் வினையைக் கெடுப்பது. ஆகாமியம், சஞ்தம், பிராரப்தம் ஆகிய மூன்று விதமான இருவினைகளை இறைவன் சிரிப்பு எரித்து வழி கண்டது. "இடர் மூன்றும் இழித்தருளும் இடமுறுவல் முகமலரிலங்க" என்று சிவதருமோத்தரம் கூறுகிறது.

சடை முடி: ஞானியார் அடையாளம் சடைமுடி. பெரும் ஞானியாக விளங்குபவர் இறைவன். பனித்த சடை, செஞ்சடை என்று திருமுறைகளில் சொல்லப்படும்.

திருமூலர் — "நுண்சிகை ஞானமாம்" என்கின்றார். அச்சடையில் முடித்த சடையும் பரந்த சடையும் உண்டு.

முடித்த சடை — ஒன்று பட்டகுவிந்த ஞானத்தையும்,

பரந்த சடை — விரிந்து உலகுயிர்களுக்கு ஞானமூட்டும் பரந்த நிலைமையும் உணர்த்துவன.

பிறை: பிறைமதி இறைவனின் அளவிலா ஞானத்தைக் குறிப்பது என்று காமிகம் கூறுகிறது. "தூ மதி சடைமிசைச்சூடுதல் தூ நெறி யாமதியான் என அமைந்தவாறே" என்பார் பட்டினத்தடிகள். வரலாறு அடிப்படையில்

பிறைமதி, முழுமதி, தக்கன் முதலியோர் சாபமேற்று தேய்மதியாக திருவடி வந்தபோது இறைவன் அதன் சாபம் நீங்க திருமுடிமேல் வைத்த நிகழ்ச்சி வினைகெடுத்து உயர்வு அளிக்கும் குறிப்பை உணர்த்தும்.

கங்கை: கங்கை கூப்பிய கரத்தோடு சடைக்கண் சிக்கி விளங்குகிறாள். இது இறைவன் எண் குணங்களும் அளவிலா ஆற்றலைக் குறிப்பது ஆகும். கணந்தோறும் பெருகிக் கொண்டேயிருக்கும் கங்கையையும் ஓர் மயிர்க்காலில் கட்டவல்ல கணக்கற்ற ஆற்றலை உணர்த்துகிறது.

ஊமத்த மலர் முதலியன—திருமுடியில் ஊமத்தமலர், பூ, எருக்கு, அருகு உண்டு. அருகு-அறிவின் நுணுக்கம்

எருக்கு-விளக்கம்

ஊமத்தம் பூ—விருப்பு,

வெறுப்பற்ற தன்மையும், கபாலம் மங்கள சொரூபி என்பதையும் குறிக்கும்.

திருவெண்ணீறு: பராசக்தியின் வடிவாய், மலங்கெடுப்பதாய் அநாதியாய்நித்திய பொருளாய்விளங்குவது என்பதை உணரலாம். பசுவின் சாணத்தில் இருந்து திருவெண்ணீறு. பசுவின் சாணம் மலம். பசுவின்மலம் ஆணவம், மாயை, கர்மம். பசுவின் மலம் சுட்டெரித்தால் திருவெண்ணீறு. மும்மலம் சுட்டெரிக்கப்படுகிறது. அதை வெற்றி கொண்டதின் அடையாளமாய் மூன்று விரல்களில் மூன்று கோடுகள் வருவது போல் பூசப்படுகிறது,

திருச்செவி: இறைவன் செவி வரநாதம் பரவும் பராகாசவடிவானவை. பராகாசம் எங்கும் பரவிய பிரணவ வடிவு. ஆதலால் உடுக்கையை ஒலித்து அப்பரநாத ஒலியை வலச்செவியில் ஏற்று ஒலி உலகை உண்டாக்கிக் கொண்டே இருக்கிறார். எனவே இறைவன் திருச்செவிகள் பராகாச வடிவானவை. இடச்செவி-மானொலியை ஏற்கிறது. மான்: அகார வடிவானஉயிர். உலகத்தை அழிக்கும் ஒலியை உண்டாக்கியது. அதனை அடக்கி திருச்செவியில் ஏற்று நிற்பது. தீய ஒலிகளையும் பராகாசத்தில் ஏற்று அடக்கியாளும் அருளாற்றலை அறிவிப்பதாகும்.

குழையும், தோடும்:

வலக்காதில்—குழை

இடக்காதில்—தோடு

ஆணொரு பெண்ணாய் அமைந்த இந்த உலகம் தன்வடிவு என்பதையும் உலகம் முழுதும் தன் வடிவு என்பதையும் உணர்த்தும் வலக்காது. துடியோசையாகிய ஒலியுலக படைப்புக்கு இடம்தந்து நிற்பது இடக்காது. அழிவாற்றலை அடக்கி யாளுவதில் ஆகிய அருளாற்றலையும் அறிவிப்பதே சிவசக்திகளின் தன்மை.

நீலகண்டம்: அது இறைவனின் அருளாற்றலை விளக்குவது என்று மணிவாசக பெருந்தகையார் திருச்சாழல் பகுதியில் கூறுகிறார். நஞ்சை உண்டும் சாகாமையால் அவருடைய நித்திய தன்மையை விளக்குவது ஆகும்.

துடி: வலக்கரங்கள் ஒன்றில் துடி உள்ளது. அது வலது காது அருகில் உள்ளது. இது படைத்தல் தொழிலைக் குறிக்கிறது.

'தோற்றம் துடியனில்'–உண்மை விளக்கம்.

'அரன் துடிதோற்றம்'–திருமூலர்.

தீயகல்: இறைவன் இடது கையில் தீயகல் உள்ளது. இது அழிக்கும் செயலைக் குறிககிறது.

'அரன் அரங்கதனில் அறையில் சங்காரம்'–திருமூலர்.

'சாற்றயிடும் அங்கியிலே சங்காரம்'–உண்மை விளக்கம்.

தீயகல் மாயாகாரியங்களாகிய தத்துவங்களைக் காட்டி உயிராகிய நீ அவற்றின் வேறானவன் என்ற உண்மை ஞானத்தை உணரச் செய்து பாசங்களை நீக்குவது. காயகாகமம், தீச்சுடரைச் சங்கார சக்தி என்கிறது.

அபயம்: பிறவிச்சூழலில் அகப்பட்டு ஓடிவந்த உயிர்களுக்கு அபயம் அளிக்கிறான். இது வலது கைகளில்ஒன்று.

'தோயும் திதி அமைப்பில் என்றும் காத்தல் தொழில்' உள்ளதாக உண்மை விளக்கம் குறிப்பிடுகிறது.

கஜஹஸ்தம்: இடது கைகளில் ஒன்று குறுக்காக திரிபதாகை முத்திரையோடு தூக்கிய திருவடியைக்குறித்து நீண்டு நிற்கிறது. இதுவே வரதஹஸ்தம். பரிபாகமுற்று ஆன்மாக்களை நோக்கி ''இதுதான் நீ அமையக் கூடிய இன்பமயமான இடம்'' என்று தூக்கிய திருவடியைச் சுட்டிக் காண்பிக்கிறது.

பூணூல்: இது இறைவனுடைய மார்பில் குறுக்காக உந்தி வரைத் தொங்குவது. மூலாதாரத்திலிருந்து நாபிககு மேலாக கிளர்ந்து எழும் குண்டலினியைக் குறிப்பது.

திருமந்திரம் 'நூலது வேதாந்தம்' எனக் கூறுவதால் வேதத்தின் முடிவாகிய பிரணவ காயத்ரியைக் குறிப்பது.

கோவணம்: அறுபத்திநாலு கலைகளையும் அறியப்படும் பரஞான கலையை நான்கு வேதங்களாகிய அரை ஞானணிற்கோத்து அணிந்திருக்கிறார் என்று மணிவாசக பெருமான் பேசுகிறார். ஆகவே கோவணம் வேதமும் பரஞானமும ஆகும்.

சிலமபும கழலும: இறைவன் திருவடியை அலங்கரிப்பன. சேக்கிழார் பெருமான் ''மறைச்சிலம்பு ஆர்ப்ப'' எனக் கூறுவதால் வேதங்களே சிலம்பாக விளங்குகின்றன என்பர்.

தூக்கிய திருவடி: இது உள்வளைந்து அடிகீழ் இருக்கும் உயிர்களுக்கு ஏற்ற முடிபோல் விளங்கி முக்தியின் பத்தை அளிப்பது.

'திருவடி நெடுங்கரை சேர்த்ததுமே' என்கிறார் பட்டினத்தார்.

ஊன்றிய திருவடி : ஒளி இருளில் தோயாது. அதன் வியாபத்தை அடக்கி நிற்பது போல் மாயாதீத மாகிய ஊன்றியதிருவடி முயலகனைத் தீண்டியும தீண்டாத நிலையும் ஒளியும் இருளும் ஒன்றினுல் இப்படித்தான் இருக்கும் என்று காட்டுகிறது.

முயலகன் : முயலகனை ஆகமங்கள் அபஸ்மாரம் என்றது. அவன் ஆணவ மலத்தின் அடையாளம். ஆணவத் தலையெடுப்பால் உயிர்கள் அணு என் னும் பெயர் தாங்கி வினைக்கீடாக அவதிப்படுகின்றன. அதன் வலி யடக்க இறைவனுல்தான் முடியும். அதனை அடக்கினுல உயிர்கள் வீடு பெறும் என்ற தத்துவத்தை உணர்த் துகின்றன, ஊன்றிய திருவடியும் அதன் கீழ் விழி பிதுங்க உடல் நெறி யக் கிடக்கும் முயலகனும்.

திருவாசி : ''ஓங்காரமே நல்திரு வாசி அதன்நீங்கா எழுத்தே நிறை சுடராம்'' என்கிறது உண்மை விளக்கம்.

கூத்தபெருமான் திருவுருவம் திரு வைந்தெழுத்தின் வடிவு. பிரண வமாகிய வித்தெழுத்தோடு தான் திருவைந் தெழுத்தை ஒலிப்பது வேண்டும். அம்மரபுப்படி ஓங்காரத் தின் இடையில் ஐந்தெழுத்து வடிவ மாக கூத்தபெருமான் விளங்குகிறுர். திருவாசியின் மேல் விளங்கும் சுடர் கள் இருபத்தி ஒன்று. அவை அத்த னையும் ஒளியின் உருவங்கள். ஒலிக் கும் ஒளிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஒன்றை விட்டு ஒன்று பிரி யாதன. ஆதலால் ஒளியிடை காணும் ஒலியிடையில் ஐந்தெழுந்து வடிவ வாகிய ஆனந்தக் கூத்தன் விளங்கு கின்றுன் என்பதை உணர்தல் வேண் டும்.

கபாலமாலை : 21 பிரம கபாலங் கள் இறைவன் கழுத்தில் விளங்கு கின்றது. ஆதிவராகத்தின் கொம் பும் அதனேடு கலந்து விளங்குகிறது. அவை இறைவன் எத்தனையோ பிரம்ம கற்பங்களையும் ஆதிவராக கற்பங்களையும் கடந்து என்றும் நித் திய பொருளாய் விளங்குபவன் என் பதை உணர்த்துகிறது.

பாம்பணி : சடை, வயிறு, மணிக் கட்டுகள், அரை, கால் இவற்றில் பாம்பு அணியாகக் காணப்படுகிறது. யோக ஆகமநூல்படி இது குண்டலினி சக்தியைக் குறிக்கும். மூலாதாரத்தில் இருந்து குண்டலினி சக்தியானது புருவநடு வரை வந்து பிரமாந்திரம் வரை செல்லும். இதை ஆங்கிலத் தில் சர்பண்டைன் (பாம்பு) யோகம் என்று சொல்லுவார்கள். காயிகாக மம் இந்த நாகசக்தி அனைத்து வகை யும் நியமிக்கிறது என்கிறது: கூத்த பெருமான் திருக்கரங்களில் பரசு, சூலம், பாசம், வாள், அங்குசம், மழு, மணி, கபாலம் முதலிய படைக் கலங்கள் அமைந்து விளங்குகின்றது.

அவை உணர்த்துவன :

பரசு : கோடாரி வடிவாய் – பாசத் தைச் சோதிப்பவன்.

கபாலம் : இறைவன் விருப்பு வெறுப்பு அற்றவன்.

பாசம் ; ஆன்மாக்களுக்கு வினை போகத்தில் ஆசையை விளை வித்து உயிர்கள் அதிலேயே அழிந்து அழியாதபடி கரை யேற்ற உதவுவது. திருவருட் சக்தி போல் உயிர்களுக்கு போக மோக்ஷத்தை உதவும்.

வாள் : இறைவனின் அளவிலா ஆற் றல். மணிவாசகப் பெருமான் ''ஞான வாள் ஏந்தும் ஐயர்'' என்கிறுர். உயிர்களின் அறி யாமையைப் போக்குவது.

அங்குசம் : வசப்படாத பொருளை வசப்படுத்துவது. பாச கர் மங்களிலே கிடந்து உழலும் உயிர்களை வலிந்திழுத்து அவற்றின் ஆணவ கயிற்றை அடக்கியாழ்வார் இறைவன்.

மழு : பறையின் வடிவாய் பாசத் சேதம் பண்ணுவது என்கி றது காரண ஆகமம்.

மணி : ஓங்கார ஒலியுடையது. அத னைத்தாங்கி அவ்வோசையை எழுப்பி உயிர்கட்கு எப்போ தும் பிரணவநாத ஒலியைக் கேட்பித்து ஆளும் அருளாற் றலை நாதத்தை உண்டாக்கு பவர்.

சூலம் : மூன்று கிளைகளை உடையது. முக்குணங்களை உணர்த்து வன என்று காயிகாகமம் கூறுகிறது. பௌஷ்கர விருத்தி—ஆரணி, ஜெனனி, ரோதயித்ரி என்ற முச்சக்தி கள் வடிவாக இருந்து முத் தொழில்கள் செய்து மும் மலங்களை நீக்கி முத்தியளிப் பது:

கலைக்கண் கொண்டு காண்பதை விட ஞானக்கண் கொண்டு காண்பது கருத்து உயர வழியாகும்.

உயிர்களுக்கு இன்பம் தரும் உல கத்தைப் படைக்க வேண்டும் என்ற திரு உள்ளத்தோடு பரமானந்த தாண்டவத்தைத் தொடங்குகிறுர். உடுக்கையிலிருந்து பதினுன்கு வகை யான ஒலிகள் உண்டாயின. அவ் வொலிகள் எழுத்துக்களுக்குப் பிறப் பாயின. ஒளியான திருமேனியுடைய இறைவன் முதலில் ஒளியைப் படைத் தார்.

எனவே மெய்யன்பர்களே! நட ராஜப் பெருமானை வழிபடும் போது இந்த தத்துவங்கள் விளங்கப்பெற்று அவற்றை அறிந்து, தியானித்து வணங்கி வழிபட்டால் நமக்கு மேலான பதவி கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை.



(4-ம் பக்கத் தொடர்ச்சி)

லின் நீராழி மண்டபத்தில், வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட தெப்பத்தில் எழுந்தருளி திருவுலா மேற்கொள்வார். விஜயநகர மன்னனின் மனைவியரான ஸ்ரீ நாகளாம்பிகாவின் கட்டளைப்படி, இக்கோயிலைச் சுற்றி கிராமம் ஒன்று நிறுவப்பட்டு அதற்கு நாகலாபுரம் என்ற பெயர் வைத்ததாக சரித்திரச் சான்றுகள் கூறுகின்றன.

## வசந்தோற்சவம் :

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் வருடாந்திர வசந்தோற்சவம் 3-4-85 முதல் 5-4-85 வரை கொண்டாடப்பட உள்ளது. கி.பி. 1360லிருந்து வழக்கில் இருந்து வந்ததாகக் கூறப்படும் இவ்விழா, கி. பி. 1468 ஆண்டு முதல் முறையாக 5 நாட்கள் நடைபெற்றதாக அவ்வாண்டு கல்வெட்டுச் சான்றுகள் கூறுகின்றன. இந்நாட்களின்போது, இறைவன் பல்வேறு வாகனங்களில் திருவீதிவுலா வந்ததாகக் கூறப்பட்டாலும், தற்போது விழாவின் 2-ம் நாளன்று மட்டுமே, உற்சவர் வெள்ளித்தேரில் எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் வழங்கும் காட்சி மிகச் சிறப்பாக அமையும். இத்தேரினை தி தி. தே. ரூ. 5 இலட்சம் செலவில் செய்வித்தது.

## தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு முடிவுகள் :

நன்கொடையாளர்களின் நிதி உதவியினை பாதி பங்காகக் கொண்டு, திருமலையில் யாத்திரிகர்களுக்கு இலவசமாக முழு உணவு வழங்கப்படும் திட்டம் ஒன்றினை, தி. தி. தே. மேற்கொள்ள உள்ளது. ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் பொறுப்பில் செயற்பட இருக்கும் இத்திட்டத்தின் முதற் கட்டமாக நாள் ஒன்றிற்கு 1000 பேருக்கு இலவசமாக முழு உணவு வழங்கப்படும்.

திருப்பதி எஸ். வி. ஆர். ஆர். பொது அரசு மருந்துவ மனைக்கு சிகிச்சைக்காக வரும் நோயாளிகளின் உதவியாளர்கள் தங்குவதற்கென்று, அம்மருத்துவமனைக்கு அருகே ரூ 7 இலட்சம் செலவில் ஓர் இலவச சத்திரம் ஒன்றினைக் கட்ட மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருப்பதியில், உடல் உறுப்புக்கள் சம்பந்தப்பட்ட அறுவை சிகிச்சையில் தேர்ச்சி பெற்ற டாக்டர். சி. வியாக்ரேஸ்வரடு அவர்களை இயக்குநராக கொண்டு விளங்கும் வகையில் 'ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு நிலையம்' எனும் கட்டடம் ஒன்றினை ரூ. 1 கோடி செலவில் கட்டுதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலையிலுள்ள பிரதான கல்யாண கட்டாவில் பணி புரியும் தலைமுடி மழிப்போரின் மாத ஊதியம் ரூ 550 லிருந்து ரூ. 750 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

## வருந்துகிறோம் :

திருப்பதியிலிருந்து 15 கி. மீ தொலைவில் ஸ்ரீ நிவாச மங்காபுரத்திலுள்ள தி. தி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் இரு காவலாளிகளான கே. ராமகிருஷ்ண ரெட்டி மற்றும் ஜெயராம ரெட்டி ஆகிய இருவரும் 30-1-85 அன்று இரவு சில கொள்ளைக்காரர்களால் கொல்லப்பட்டனர் என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கின்றோம். அவர்களை இழந்து தவிக்கும் அவர்களுடைய குடும்பத்தார்க்கு எங்களுடைய ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.



ஆசியாவிலேயே மிகப்பெரிய ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாதர் ஸந்நிதி ராஜகோபுர திருப்பணி கைங்கர்யத்தில் முக்கிய பங்கு பெற்ற 44-வது பட்டம் ஸ்ரீமத் அழகிய சிங்கர்.
அனுப்பியவர் : A. T. கிருஷ்ணன் - சென்னை.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D PRESS, TIRUPATI-517501

